# கவிச்சக்ரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் சரித்திரம்

சி. கு. நாராயணசாமி
முதலியார்

1913.

உ

# பொருளடக்கம்.

## மேற்கோள் செய்யுட்டொகை.



1 சிலப்பதிகாரம்.
2 சீவகசிந்தாமணி.
3 திருக்குறள்.
4 நாலடியார்.
5 இராமாயணம்.
6 வில்லிபுத்தூரார் பாரதம்
7 நளவெண்பா.
8 திருச்சிற்றம்பலக் கோவை.
10 இலக்கணக்கொத்து.
11 மெய்ப்பாட்டியல்.
12 விக்கிரமச்சொழன் உலா.
14 விக்கிரமச்சோழன் சிலாசாஸனம்.
15 தக்கயாகப்பரணி.
16 சங்கரச்சோழன் உலா.
17 தமிழ்நாவலர் சரிதை.
18 சோழமண்டல சதகம்.
19 தொண்டைமண்டல சதகம்,
2( பாண்டிமண்டலசதகம்.
21 புலவர் புராணம்.
22 கம்பர் திருக்கை வழக்கம்,
23 ஈட்டியெழுபது.
24 வல்லான்காவியம்.
25 கந்தவிரத விலாசம்.
26 செங்குந்தர் மாலை.
27 செங்குந்தர் திருக்கை வழக்கம்.
28 செங்குந்தர் சிலாக்கியர் மாலை.
29 தமிழ்ச் செய்யுட் சிந்தாமணி.
30 அரும்பகைத் தொள்ளாயிரம்.
3ı தனிப்பாடல்கள்.

L. MEYYAPPAN
2. NDFORM. A. KARAIKUDI♡

Presented by
M. L. Meyyappa
Chetti

உ

# முகவுரை.

சிறப்புற்ற நமது நாட்டில், பாமரர் முதல் பண்டிதரீறாகவுள்ள தமிழ்மக்கள் அனைவரும், 'ஒட்டக்கூத்தர்' என ஒரு தமிழ்ப்புலவரிருந்ததாகக் கூறிவருவதைக் கேட்டுவருகின்றாராயினும், இப் பெருந்தகை யார், யார்? எக்குலத்தவர்? எவ்வரசர்பாற் சிறப்பெய்தியவர்? இவர்சரிதையாது? என்பனவற்றை நன்குணர்ந்தவர் சிலரேனு முளராவென்பது சந்தேகமே. ஷேக்ஸ்பியர், டெனிசன் என்ற சரித்திரப்பிரசித்தரான ஆசிரியர்களைப்பற்றி அங்கிலமுணர்ந்தவல்லாரறிந்திருப்பதில் நூற்றிலொருபங்காவது பழைமையான நம் புலவர்களைப்பற்றி, நாமறியாதிருப்பது விசனிக்கக் கூடியதே. பிறநாட்டுச் சரிதத்தைப் பேணிப்படிக்கும் நாம், நம் தமிழ்நாட்டுச் சரிதத்தைப் புறக்கணிப்பது 'புறக்கடைப் பச்சிலை மருந்துக்குதவாது' என்றார் போலும். நமது நாட்டுப் பேருபகாரிகளின் சரிதத்தை நாமறியாதிருப்பது நன்றோ? 'தினைத்துணை நன்றிசெயினும் பனைத்துணையாக் கொள்வர் பயன்றெரிவார்' என்றபடி சொற்பநன்றி செய்தவர்களையே பெருநன்றி செய்தவராகக் கருதவேண்டியநாம், பெருநன்றி செய்தவர்களை மறப்பது பெருமையோ? "நன்றிமறப்பது நன்றன்றே," ஆகலான் இத்திருவாளரின் திவ்ய சரிதையைப் பலருமறியும் வண்ணம் தக்கவாறு 'ஆராய்ச்சி

செய்து சரிதமுறையைப் பின்பற்றி அரும்பிரயாசைப் பட்டு விரிவாக முடித்துளேம். எவரும்படித்து மகி ழும்வண்ணம் விலையுஞ் சுருக்கியிருக்கின்றேம். அன் பர்கள் அவாவுடன் ஏற்பாராக.

குற்றமே தெரிவார் குறுமாமுனி
சொற்றபாவினு மோர்குறை சொல்வரால்

என்றிருப்பதால் இதிற் பிழைகாண்பது பெரிதன்று.

புலவர்வாழ்ந்தகாலங் கணிப்பதற்கும், வேறு சில குறிப்புகட்கும், மதுரைத் தமிழ்ச்சங்கச் "செந்தமிழ்ப்பத்திரிகை" நமக்குப் பெருந்துணையாக விருந்ததால் அதன் நன்றி மறக்கக்கூடியதன்று.

நாமிப்புத்தகத்தைப் பதிப்பிக்குங்கால் உடனின்று சிரமங்கருதாது புரூப் முதலியவை திருத்தியுதவிய ஸ்ரீமாந் பு. வே. சபாபதிமுதலியா ரவர்கட்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுளேம்.

Saradhvilas Sabha,
Coimbatore 5-11-13.

சி. கு. நா.

சென்னை - வேப்பேரி
எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதரும்
'நல்லாசிரியன்' பத்திராதிபருமாகிய
கா. நமச்சிவாய முதலியா ரவர்கள் கூறிய

## சிறப்புப் பாயிரம்.

எந்தத் தேசமாயினும், எந்த மதத்தினராயினும் எந்தச் சார்பினராயினும் ஏற்றமடைய வேண்டின் தங் தேசச் சரித்திரமேயன்றிப் பிறதேசச் சரித்திரத்தையும் கற்று, அதன்படி யொழுகவேண்டும். இக் கருத்துப் பற்றியே உலகில் சரித்திரங்கள் நிகழத் தலைப்பட்டன. நமது இந்து தேசத்திற்கா யமைந்த சரித்திரங்கள்பெரும்பாலும் மதசம்பந்தம் பெற்றனவாய், அபூதவர்ணனை, அலங்கார ரூபகம், தெய்வத் தன்மை, இயற்கைவிரோதம் பெற்றனவாய் இருக்கின்றன. அவைதாம் புராணேதிகாசங்களாம். அவையும்,சமஸ்கிருதத்திலமைந்து பெட்டியிலிட்டுப் பூட்டிய பொருள்போலிருப்பதால், தேச பாஷைகளில் இவைகளைப் பெயர்த்தெழுதவந்த புலவர்கள் கல்விப் பெருமிதத்தைநாடிப் பாவினத்திலேயே எழுதியுள்ளார். அதுவும், படிப்போர் எளிதிலறிய வியலாத கடுநடையிலும், திரிபிலும், சந்தத்திலும், யமகத்திலும் அமைந்துள்ளதால், சாமானியருக்கு அவற்றின் பயன் சிறிதுமுதவாதொழிந்தது. இலக்கியவிலக்கண• ஆராய்ச்சி

யுள்ளார் அவையிற்றைக் கற்கின்றூர்களெனின், அவர்கள் காலப்போக்கிற்கும், புலமைமிகுதிக்கும், பிழைப்புக்குமாத்திரமேயன்றி அறிவு நிரம்பி, அதன்வழி நின்று தாமேயன்றித் தம்போல்வாரையும் திருத்துதற் கன்றென்க. சரித்திரமறிந்து அதன் வழிநிற்கின்றோர் நந்தேயத்தில் இலரோவெனில், அற்றன்று, இருக்கின்றூர், ஆனல், மிகுசிலரே. இவரை யறிவது மணற்சோற்றில் கல்லாராய்வதையொக்கும். இவ்வழக்கம் ஆதிகாலந்தொட்டுப் பொதுவாய் இந்தியாகண்ட முழுதுமிருந்தது. சமஸ்கிரதபாஷை தென்னுட்டில் வந்து வழங்குமுன்னமே நன்னிலையி லிருந்த தமிழருள் இவ்வழக்கம் இருந்ததாகத் தெரிபவில்லை. சமஸ்கிரதத்தின் ஆதிக்கியம் மிகுதியும் பெருதும், தமிழ் நாட்டிற்கே உரியதாயும் உள்ள சரித்திர பூர்வகமான நூல்களில் மேற்கண்ட குற்றங்கள் காண்பதருமை அதனை சிலப்பதிகாரம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய பழைய தமிழ் நூல்களிற் காணலாம். இந்நூல்களை நாம் பயிலுங்கால், அவற்றிற்காதாரமாகிய சரித்திரங்களும், அச் சரித்திரத் தலைவர்களும், ஏனையபாத்திரங்களும், காலவியல்பும், தேசம், மதம், நடையுடை பாவனைகளும், அங்கை நெல்லிக்கனிபோல் அறியக் கிடப்பதை எவர்தான் கண்டுணரார். இவையோடும், பிற்காலத்துத் தோன்றிய இவையொத்த நூலோடும் நிற்பின் நம்தமிழ்நாடு ஏற்றமடைந்திருக்குமல்லவா ?

இவையிற்றிற்கு மாருக சமஸ்கிரத நூல்களின் மொழிபெயர்ப்புக்கள் தமிழில் வழங்க வாரம்பித்தன. தமிழுணர்ந்த புலவர்கள் சமஸ்கிருதத்திற்காணும்

அளவிறந்த நயங்களில் அழுந்திவிட்டார்களேயன்றி உண்மையையறியவும், பிற்காலத்தியல்பை எதிர்நோக்கவும், தலையெடுத்தாரில்லை. அதனால் புராணகாலந் தொட்டு நிலவிவந்த புலவர்கள், பெரியோர், அரசர் முதலியோர் குணம், நடை, கல்வி, ஒழுக்கங்களிற் காணும் ஏற்றங்களை, நமக்கு எளிதில் விளக்க நூல்களில்லாதுபோயின. இருந்த ஆதாரங்களும் காலவேற்றத்தாலும், அரசுமாற்றத்தாலும், மற்றுங் குறைகளாலும் அழிந்துபோயின. இதனால் இரண்டொன்று நீங்கலாய்த் தமிழிலுள்ள நூல்கள் பெரும்பாலும் சரித்திர உண்மையைக் காட்ட வியலாவாகி, யிருந்தும் பயனிலவாயின.

இனி இக்குறையை நீக்க இக்காலத்தில் தமிழ் கற்றோர் வெளிவருதல் தக்கதே. சென்றநூற்றாண்டினிறுதியில் சிலவித்துவசிகாமணிகள் தாம் விற்பத்தியடைந்திருந்த அங்கிலபாஷையின் உதவியால் நம்நாட்டுப் பெரியோர் சரித்திரங்களுட் சிலவற்றை எழுதி வெளியிட்டனர். இவர்கள்பாடு கண்ணைக்கட்டிக் காட்டில் விடப்பட்டவன் பாடகத்தான் இருந்தது. இருந்தும் உழைப்பும், சிரமமும், செலவும், பொருட்படுத்தாமல் விடாது முயன்றதில், சரித்திரங்கள் இன்னதன்மையில் இருக்கவேண்டுமென்று வழியைக்காட்ட வல்லவராயினர். அவ்வழியைப்பற்றி உழைப்பவர் தோன்றியுள்ளதாகவும், தோன்றுவதாகவும் தெரிவதால், தமிழ்நாட்டுக்குச் சரித்திரவிஷயத்தில் தக்க சேமநிதி யிருக்கின்றதென்றே சொல்லலாம்,

சரித்திரம் உண்மையானதா யிருக்கவேண்டின் பூர்வசாசன ஆதாரங்கொண்டும், சரித்திரத்தலைவனாற் சொல்லப்பட்ட தன்னுதாரங்கொண்டும், அத்தலைவன் காலத்திலிருந்தோர் அவன் விஷயமாய்ச் சொல்லி யுள்ள ஆதாரங்கொண்டும் இயலவேண்டும். இவ் விலக்கணத்தை நாடியே எனது நண்பர் ம-ா-ா-ஸ்ரீ சி. கு. நாராயணசாமி முதலியார் ' கவிச்சக்ரவர்த்தியா கிய ஒட்டக்கூத்தர் சரித்திரம் " என்னும் நூலை இயற்றியிருக்கின்றார். இச் சரித்திரத்திற் காதா மாகக்கொண்ட விஷயமுற்றும் பாராட்டத்தக்கன. இப்புலவர் சரித்திரத்தில் கன்றியமனத்தாலும், பொறுமையாலும், உண்மையை அறியாமையா லும், அறிவின்மையாலும், பண்டித பாமரரால் வழங்கும் நம்பக்கூடாதனவும், பொய்ம்மையுமான விஷயங்களை இதன் ஆசிரியர் தக்க சமாதா னஞ்சொல்லிக் கண்டித்திருப்பதை அறிவுடையோர் கவனிக்கற்பாலர். நம்பக்கூடியவும், உண்மைக்கு ஒப்ப முடிந்தவுமான ஆதாரங்களைக்கொண்டே இந் நூல் ஆக்கப்பட்டிருப்பதால், கல்விபயிலும் மாணாக் கர்களும், அவர்களுக்குச் சரித்திரக் கல்வியூட்டும் உபாத்தியாயர்களும், இந்நூலைப் படிக்கவேண்டுமென் பது எனது கொள்கை. இம்மாதிரியான சரித்திரங் களை பிள்ளைகளுக்கு நன்மாதிரியைக் காட்டக்கூடிய தாயிருப்பதால், பெற்றாலும் இச்சரித்திரம் பாரா ட்டற்குரியதாம்.

இனி. இச்சரித்திரத்தின் கருத்து நடைகடினமா யிருந்தால் நிறைவேறாது. பண்டிதபாமர ரஞ்சிதமா

யும், படிக்கப்படிக்க இனிமையாயும், இருந்தால்தான் பாராட்ட இடங்கொடுக்கும், இப்புத்தகம் இயன்றுள்ள நடையும், இவ்விலக்கணத்திற் கொத்திருப்பதை யாவருங் காணலாம்.

இவ்வகைய சரித்திரம் வெளிவந்துலாவின் இனித் தமிழ் நாட்டுப் பெருமக்களாயமையும் பிள்ளைகளுக்குப், பேருபகாரமாயிருக்குமாதலால் வித்தியாதிகாரிகளும் பாடசாலை யுபாத்தியாயர்களும், தமிழபிமானமுள்ள பிரபுக்களுய். இதன் ஆசிரியரைச் சிறப்பித்து இவ்வகைய சரித்திரம் பல வெளிவர வூக்குவிப்பார்களாக. சுபம்.

Madras, 26—10—13.

இங்ஙனம்:
C. R. நமச்சிவாயன்.



# சாற்றுக்கவி.

இஃது

கோயமுத்தூர் முனிசிபல் பள்ளபாளையம்
தமிழ்ப் பண்டிதர்
ந. வையாபுரி பிள்ளையவர்கள்
இயற்றியது.

திருவளருங் கோவைதனி லுதித்தெஞ்ஞான்றுந்
திகழ் ஞானமுறு நூல்கள் பலவாராய்ந்தே
தருவளருங் கொடைநிகர்ப்ப வாய்ந்தோ ராய்வோர்
தமக்குறு மின்றுணையாகத் தகுதிவாய்ந்த
உருவளருஞ் சரிதைபல வுவந்து செய்தே
உலகோத வைத்தபின்ன ரொட்டக்கூத்தன்
அருவளருஞ் சரிதையிசைத் தன்பாலீந்தான்
அமிழ்தென நாராயணவின் னறிவன் மாதோ.

———

அவிநாசிக்கடுத்த கணக்கம்பாளையம் ஸ்கூல்மாஸ்டர்
ம-ா-ா-ஸ்ரீ K. குமாரசுவாமிப்பிள்ளை யவர்கள்
இயற்றியது.

வட்டக்கூத் தரித்தமுடிச் சேடனிக ரினியதமிழ்
வாய்ந்த மேலா
மொட்டக்கூத் தருக்குரிய சரிதமெனப் புலவரெலா
முரைக்கப் பேரு

ரிட்டக்கூத் தருக்கன்ப னானாரா யணசாமி
யியைத்தான் கோயைத்
திட்டக்கூத் தருமோசைக் கோகிலக்காச் சூழ்பதியிற்
செம்ம றானே.

---

கோயமுத்தூரைச்சார்ந்த சிதம்பரையம்பாளையம்

ஸ்கூல்மாஸ்டர்

ம-ள-ள-ஸ்ரீ K. சிவன் மலையப்பபிள்ளை யவர்கள்

இயற்றியது.

தவிச்சக்ர மத்தரெலா முறிந்தோட மறுமுறையிற்
றவறா தாண்ட
புவிச்சக்ரவர்த்தியெலாம் புகழ்ந்துதுதி செயும்பெரிய
புனிதம் வாய்ந்த
கவிச்சக்ர வர்த்தியொட்டக் கூத்தர்சரி தம்மறிஞர்
கருதச் செய்தா
னவிச்சக்ர மந்தொலைக்க வரற்பணிநா ராயணசாமி
யண்ண றானே.

இஃது

வெண்பா.

நாட்டிலொட்டக் கூத்தருக்கு நற்சரிதமில்லையென்று
தேட்டமுற்றுச் செய்தான்சி றப்பாகப்-பாட்டின்மிக்க
நற்கவிஞன் கோயநகர் நாரா யணசாமி
சற்சனர்கள் மெச்சு சதுரன்.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்திற் பிரவேச பண்டித
பட்டம்பெற்ற
ஸ்ரீமான் K, S, வெங்கடராவ் அவர்கள்
இயற்றியது

அலைகடலுட்பட்டுக்கமொல் கிடைவாழி நெடுங்கையனே
கலைமகணட்பற் பேச்சிலுரையொடு காணமறைந்திடவே
மலையமதுட்புக் கேக்கமருவிட மாகடலுண்டவனே
நலமிகு மொட்டக்கூத்தாது கதைநாடு மகிழ்ந்திடவே.

முன்டிடுகு வெண்பா.

தந்தனன் தனந்தவண்டு சங்கடந் தவிர்த்துசென்று
தந்தனந் தரமொசிந்த சைந்துவிழ—வந்துவைகும்
தண்புய லைத்தாங்குமெங்கள் தாய்கோனி மூத்தூர் வாழ்
கண்ப நாராயண நாமன்.

---

ஈரோடு மஹாராஜன ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
ம-ா-ா-ஸ்ரீ சே. ரா. திம்மப்பையரவர்கள்
இயற்றியது
நேரிசைவெண்பா.

பார்புகழொட் டக்கூத்தப் பாவலர்தஞ் சீஞ்சரித
மேர்வசனநூலா யினிதளித்தான்—பார்புகழும்
நாராயணசாமி கற்கலைஞ னோதுபுகழ்த்
தாராரும் கோவையிடத் தான்.

---

L.MEYYAPPAN
2.NDFORM.A.KARAIKUDI

உ

# கவிச்சக்ரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் சரித்திரம்.

---

## காப்பு.

### நேரிசை வெண்பா.

உலகம் புகழ்தேத்து மொண்புலவன் கூத்தன்
இலசேர்ச் சரிதை யியம்ப—நிலமேழும்
எத்துகந்த னேத்துகந்தங் கேற்பவந்த வேரம்பன்
காத்துகந்து நிற்கவந்தென் கண்.

இப்பெருந்தகையாரது சிறந்த சரித மொன்றை உலகினர் உண்மையுறக் கண்டு மகிழ்தற்கிடமின்றிக் கற்பனையாகிய கட்டுரைகள் செறிந்து, மெய் தவிர்ந்து நிற்றல் எவரு மறிந்ததோருண்மை. இங்ஙனம் இயற்கை குன்றிப் பொலிவற்று நிலவு மிதனை இதுவரை நந்தமிழகப் புலவரெவரேனும் ஆய்ந்து வெளியிட முற்பட்டாரில்லை. இது தமிழணங்கின் துர்ப்பாக்கியம்போலும்.

வினோதரசமஞ்சரி, புலவர் புராணம், தனிப்பாடற்றிரட்டு, பாவலர் சரித்திர தீபகம், அபிதானகோசம், ஒட்டக்கூத்தர் சரித்திரச் சுருக்கம், யாழ்ப்பாணப் பேரகராதி, மேட்ரிகுலேஷன் தமிழுரைகள் முதலிய புத்தகங்களில் இப்புலவர் சரிதங்கள் காணப்பட்டாலும்

அவைகள் தக்க ஆராய்ச்சியின்றி மனம்போனவாறு கர்ணபரம்பரைச் செய்திகளையே பேராதாரவாகக் கொண்டு வெளி வந்துள்ளன. இப்பெரியாரது வரலாறு இங்ஙனம் இயற்கை திரிந்து வழங்குவதைக் கண்டு சகிக்கலாற்றாது இதனைக் கற்றாரும் மற்றாரும் எளிதிலுணர்ந்து மகிழும் வண்ணம் இப்புலவரின் இனிய சரிதத்தை ஒருவாறு ஒழுங்காக்கி வெளிப்படுத்தி யிருக்கின்றோம்.

நமது நாட்டில் முன்னாளில் விளங்கிய புலவர் பெருமான்களின் அரிய சரிதங்கள் இக்கால நிலைக்கேற்ப அமைவுறாது ஓரே கதம்பமாய்ப் பரந்து கிடப்பதால், இதனைப் பின்வருமாறு பாகுபடுத்தி எழுதலாயினோம். ஒருவரது சரிதத்தைப் பகுக்குங்கால் அவர் பிறப்பிடம், மரபு, காலம், களன், நூல் முதலியவைகளே சிறந்து நிற்பனவாம். இங்ஙனம் வகுத்த பின்னர் இப்புலவர் பெருமானின் இனிய வரலாற்றை வரையப் புகுங்கால் இவர் இன்ன வூரிற் பிறந்தனரென்பதைத் துணிவதே முதன்மையாகும். இவ்வாராய்ச்சிக்குப் பெருந்துணையாகக் காண்பன:—தமிழ் நாவலர் சரிதை, சோழமண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், ஈட்டி யெழுபது என்பனவும் பிறவுமாம்.

(1)

இவர் ஊர்.

தேனுந்து மலர்சோலைத் திருமணலூர்ச் சிவசங்கக்
கோனந்தச் சிற்சபையெங் கூத்தனருட் கூத்தனெனு
மானந்தச் செல்வனின தாசனத்தி லலகுபெறி
னானந்தச் செனனமுனை நயந்திரத்த வென்கடனே.

(கந்தவிரத விலாசம்)

L. MEYYAPPAN
2. NDFORM. A. KARAIKUDI ♡



இப்பாடலைக்கொண்டு சிலர் நம்புலவர் திருமணவூரிற் பிறந்தார் எனக் கூறுவர். ஆனால், திருமணவூர் என்னும் அடைமொழி சிவசங்கக் கோனுக்கு உரிமையாக்காது ஒட்டக்கூத்தருக் காக்குவது என் கருதியோ? நன்கு நோக்குங்கால் திருமணவூர் சிவசங்கக் கோனுக்கே அடைமொழியாய்ச் சிறப்பாகத் தோன்றுகின்றது.

பசுபதி யருளாலந்நாட் பார்முழுமையும் கைக்கொண்ட
முசுகுந்தன் றுணையாவந்த முரட்பெருவீரர் மைந்தர்
விசுவமேற் செய்ததாப மெய்த்தவப் பயனேயாகிச்
சிசுவொன்று சோழநாட்டிற் சீயமொத் துதித்ததம்மா.

(புலவர்புராணம்.)

என ஒட்டக்கூத்தர் சோழநாட்டி னுதித்தாரெனப் பொதுவாகக் கூறிப் போந்ததால் இன்னவூர் எனத் துணியக் கூடவில்லை.

* சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்று—ளொன்று
மலரிவருங் கூந்தலார் மாதர் நோக்கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு.

(அலங்கார சாத்திரம்.)

என்னுமிப் பாடலில் 'மலரிவருங்" கூத்தனென்று சோழநாட்டைச் சேர்ந்த 'மலரி' என்னுமோரூரில் அவதரித்தார் என்பது பெறப்படுகின்றது.

மேற்கூறிய பாடலில் "சோழநாட்டிற் சீயமொத் துதித்ததம்மா" எனக் கூறியதனாலும், மற்ற கவி

---

* இதனுள் ஒன்று கண்ணாகவும், மற்றொன்று கவியாகவும் நின்றவாறு கண்டுகொள்க. மலரி என்பது ஓர் ஊர்.

யில் மலரியெனும் சோழநாட்டிலிருக்கு மோரூரிற் பிறந்தாரெனச் சுட்டுவதாலும், நம் புலவர்பெருமா னவதரித்த வூர் மலரி என்றே யாம் துணிதல் வேண்டும். இங்ஙனமல்லாது ஒருசாரார்

"கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத் த்தனென்றுங், கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ"

என்னுஞ் செய்யுளிலுள்ள "காளியொட்டக் கூத்தன்" என்னுந் தொடரைக் "காழியொட்டக்கூத்த" னெனப் பிரதிபேதஞ்செய்து, இப்புலவர் சீகாழியிற் பிறந்தவ ரெனக் கூறுவர் ஆனல் இச்செய்யுளையாக்கிய கவி யின் கருத்து அவ்வாறிருக்குமோவெனக் கவனிக்கற் பாலது. இப்பெயர்களை விஞேதமானவை எனக் கூறப்புகுந்தவர் இடையில் ஒருவரை மாத்திரம் அவ ரூரால் விசேடித்தாரென்பது முரண்படுகின்றது.

மேலும் இப்புலவர் "வில்லிபுத்தூரார்" என்பது போல் காழியொட்டக்கூத்த ரெனவழக்கி லில்லா மையால் உலக வழக்காகக் கூறியதென்று கொள்ளவு மிடமில்லை.

நம் பெரியாரது சரித்திரங்களில் இத்தகைய இடர்கள் நம்மை வருத்துவதற்குக் காரணம் அக் காலத்தான்றோர் அறிஞர்களின் அரும்பெருஞ் சரி தங்களை அவ்வப்போது குறித்துவைக்காத் தோஷமே. இங்ஙனம் நமது புலவர் சரிதங்களில் குறைகள் நிகழு வது சாதமென்பதைப்பற்றி மேனுட்டுச் சரிதக்கார ராகிய "கால்ட்வேல்" என்னும் பண்டிதர் கூறுவதை இச் சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமானதென்று இதன் கீழ்க் குறிக்கின்றோம்.

"தமிழ் நூற்களிலொன்றற்கேனும் நம்பக்கூடிய திட்டமான காலமேற்படவில்லை. நாம் ஒரு நூலின் காலத்தையாவது அல்லது இயற்றியவர் காலத்தை யாவது உத்தேசமாகச் சொல்லப் புகின், நூற்றாண்டின் கணக்காக வித்தியாச முண்டாகின்றது. பொதுவாக இந்து தேசத்துக் கவிஞர் போலவே தமிழ் நூலாசிரியர்களும் தம்மை இன்னாரென்றும், இக் காலத்தவரென்றும் பிற்காலத்தாரறியத் தமது நூற்களிலாதாரம் வைப்பதில்லை. அநேக நூற்களுக்கு இயற்றியவர் பெயரே இன்னுந் தெரியாமலிருக்கிறது. தமிழ்க் கவிஞர் ஒருவர்போலெல்லோரும் தம்பெயரை உலகறிந்து வியந்து கொண்டாடவேண்டுமென்று விரும்பினதில்லை. தமிழ்ப் புலவர்கள் நூற்கள் தழைத்தலையே தம் நயமாகக் கருதித் தாம் தம் நூலிலேயே மறைந்து அவற்றின் பெருமையிலிருமாந்திருந்தனர். பிற்காலத்தவர்களும் அவர்கள் முன்மாதிரியைப் பின்பற்றிக்கொண்டு வந்தனர். ஒரு நூலில் நயங்காணின் நம்மவர் அதைமட்டும் வியந்தார்களே யன்றி அது மனிதர் இயற்றியதோ, தெய்வம் இயற்றியதோ, (அல்லது வேதங்கள் தாமேயெழுதிக் கொண்டனவென்று சாமானியர் சொல்லிக் கொள்வதுபோல) தானே தன்னை இயற்றிக்கொண்டதோ என்று தெரிந்துகொண்டதுமில்லை, தெரிதலை லக்ஷியமாக நினைத்ததுமில்லை. நூலில் நயமின்றெனின் அதைத் தொட்டுப்பாரார். பழைய சரித்திரப் பரிசீலனையும், பழைய நூற் பரிசோதனையும் நடந்துவரத் தொடங்கியது கொஞ்சகாலமாகத்தான். ஆகையால்

நான் சில முக்கியமான தமிழ் நூற்களின் காலங்களை விளக்க முயலும்போது எனக்கு நிதர்சனமெனப் படுவதெல்லாம் அந்நூற்கள் இருக்கின்றன என்பது மாத்திரமே,'' என்கின்றார்.

கால்ட்வெல் ஆசிரியரை நிகர்த்த ஆராய்ச்சி வல்லுனர் அபிப்பிராய மின்றியமையாச் சாதனமென்று நினைக்கப்படாதிருத்தல். புதுமையன்று. கவிஞர்கள் தம்மையே தம் நூலில் ஒளித்தல் சாதாரணமானால் அவர்காலத்துச் சரித்திரத்தை அறுதியிட அவர்கள் நூல் என்னபயன்படும்? ஆயினும் தமிழ் நூலாசிரியர் அநேகர் புராண மியற்றினரும், கலம்பகம், அந்தாதி, கோவை உலா முதலிய சிறு பிரபந்தமியற்றினரும் இக்குற்றத்திற்கு இலக்கானவர்தான் என்பதை மறுக்கவொண்ணாது.

(2)

இவர் மரபு.

மங்காத கீர்த்தி மறைநெறியாற்றின் மனுமுறைகள்
பொங்காகிற் பக்கவிச் சக்கரவர்த்தியெனத் தறைகள்
தொங்கா தவைதரச் சத்தியச் செங்கோல் சுமந்துசிரச்
சிங்கா தனத்திவர்ந் தாள்வோர் செங்குந்த சிலாக்கியரே.

(செங்குந்தர் சிலாக்கியமாலை)

எனவரும் இப்பாடலால் இப்புலவர் செங்குந்த மரபின ரென்றறியற்பாலது. அன்றியும் வாழையடி வாழையாய்ப் பல வான்றோர்கள் இவரைச் செங்குந்தப் புலவரென வழங்கிவருவதுமே போதிய சான்றும். “ஈட்டி எழுபது” என்னும் நூலினும்,

"எந்தையா மம்மைடாகத் திறைவனை வணங்கி யாமே, பைந்தமிழ்ப் பாணிசெய்த பாடலோடு,"

என இவர் சிவபெருமானைத் தம் தந்தையென வாழ்த்துக் கூறுதலானும், செங்குந்த மரபோர் "சிவ குமாரரும்" "சேவ்வேளின்றுணைவ" ருமெனக் கந்த புராண முதலிய நூற்களிற் காணப்படுவதாலும் இப் புலவர் செங்குந்தமர பினரெனக் கூறக் காரணமுமுண்டு.

(3)

இவர் வளர்ந்து கல்விபயின்று சிறந்தவாறு

இங்ஙன மிலங்கிய கூத்தர் தமது இளமைக் காலத்தே புதுவையின்கண் வாழ்ந்த வெண்ணெய்ச் சடையன் றந்தையாகிய "சங்கரன்" என்பாற்கு உதவித் தொழில் புரிந்துகொண்டிருந்தனரெனவும், அவரை அப் புதுவையின்கணிருந்த "காங்கேயன்" என்னும் உபகாரி யொருவன் கல்வி பயில்வித்து நல்லறிஞனுக்கிக் "கவிராக்ஷதன்" எனவும், "கௌடவ" னெனவும் பெயர் சிறப்பித்து உயரச் செய்தனனெனவும், அந்நன்றி பாராட்டிக் கூத்தர் காங்கேயன் மேல் "நாலாயிரக்கோவை" யொன்று பாடினரெனவும் தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது. 'கௌடம்' என்பது ஒருவகைக் கவி மார்க்கம். அது பொருள் புலப்படத் தொடுப்பதினும் சொல்வளம்படத் தொடுப்பதே சிறப்பெனக் கருதுவதாம். இவற்றிற்குச் சான்று :—

கோலாகலமன்னரிலிவன் போற்கொடுத்தே புகழுங் கொண்டாரார், மேலார் கவுடப் புலவனெனும் விழுப்பேர்க் கூத்தன் முழுப்போரா, ஞாலாயிரக்கோவையும் புனைய கவில் கென்றிசைத்து நாட்டுபுகழ், மாலாமெனுங் காங்கயன் வாழ்வு வளஞ்சேர் சோழ மண்டலமே.

(சோழமண்டலசதகம்)

மேற்கோள்

"புதுவைச்சடையன் பொருந்து சங்கரனுக்
குதவித்தொழில்புரி யொட்டக் கூத்தனை
கவிக்களிறுகைக்குங் கவிராக்ஷதனெனப்
புவிக்குயர் கவுடப் புலவனுமாக்கி
வேறுமங் கலநாள் வியந்துகாங் கயன்மேற்
கூறுநாலாயிரக் கோவை கொண்டு யர்ந்தோன்."

எனவருமாற்றுனறிக.

(4)

இவர் வறுமை யுற்றதும் வாணியருள் பெற்றதும்.

இங்ஙனம் புலமை யெய்திச் சிறக்குமுன் தம்மை அபிமானித்துக் காத்தவள்ளல் அந்திம தசையடைந்தனர். உடனுக மிடி யென்னுந் தோழன் உறவுகொண்டாடத் தொடங்கினன். கலைமாது சேர்ந்தவிடத்துத் திருமாது சேராளென்பது வியப்பல்லவே. வறுமைநோயால் வருந்திய புலவர்க்குப் புதைப் பொருள் கிடைத்ததொப்ப அக்காலத்துத் தமிழ்காக்கும் பெருமானும் கொடைத்திறஞ் சிறந்த வள்ளலாயும் விளங்கிய "விக்கிரமன்" என்னும் சோழவரசனை யடுத்துத் தமது கல்வித்திறங் காட்டி அவனைச் சந்தோஷிப்பித்தனர். அங்வேந்தனும் இப்புலவரின் கற்பனு

விசேட கவிசாதுர்ய மதிநுட்பத்துக்குப் பெரிதும் வியந்து உளங் களித்துக் கம்பளம், குண்டலம், கங்கணம், கரி முதலிய பலவரிசைகளை விருதாயளித்துச் சன்மானித்தனனென்ப.

இது தமிழ் நாவலர் சரிதையில் "சோழன் வரிசையளித்து விடுத்தபோது கூத்த முதலியார் கூறிய வதுப்பு" என்னுந் தலைப்பின்கீழ்,

> இடுக்கட் புண்படு மிரப்புக்கொண்டுழன் றிரக்கச்சென்றவின் றெனக்குச்சிங்களந், திடுக்குற் றஞ்சம்வெஞ் சினத்துச்செம்பியன் றிருக்கைப்பங்கயஞ் சிறக்கத்தந்தன, படுக்கக்கம்பளம் பதக்கக்குங்குமம் பதிக்கக்கங்கணம் பரிக்கக்குஞ்சரங், கடுக்கக்குண்டலங் கவிக்கச்சங்கினங் கவிக்குப்பஞ்சரங் கவிக்குத் தொங்கலே.

என வருஞ் செய்யுளொன்று காணப்படுகின்றது.

இவ்வாறு மீடியின் இடிதீர்ந்து மனங்களித்த புலவற்கு மாட்சிமையெய்த வாணியின் இன்னருளும் எளிதில் கிடைத்ததென்ப. திருமடந்தையாம்போதவையு மாமன்றோ?

சீகாழித் தோணியப்பரின் திருவருட் கன்பராகிய திருஞானசம்பந்தப் பெருமான் மூவாண்டில் பெரியநாயகியாரின் அருந்தனப் பாலுண்டு பாடவல்ல பாக்கியம் பெற்றனரெனவும், திருவானைக்காவில் சுயம்பாகியாயிருந்த விப்பிரற்கு அகிலாண்ட ஈசுவரியின் தம்பலங் கிடைக்க ஆசுகவி 'காளமேக' மென்று பெயர் சிறக்கப் பெற்றனரெனவும், அண்ணாமலையிலிருந்த அருணகிரியாற்கு முருகவேள் காட்சி யளித்து வேலால் நாவில் பீஜாக்ஷரம் பொறிக்கத் திருப்புகழ்

பாட வாய்த்ததெனவும், நம்முள் வழங்குமாறுபோல கூத்தரும் சாரசுவதி தம்பலங் கொடுக்க வரகவி யாய்த் திகழ்ந்தாரென் றறியப்படுகின்றது.

இவற்றின் உண்மையைப்பற்றி எவரெவ்விதங் கொள்ளினும் இப்புலவர்கள்பால் கலைமகளார்க்குக் கருணைவாரிதி பெருகித் தமது திருவருட்குரிய தொண்டர்களெனக் கொண்டனரென்பதற் கைய முண்டோ ?

இங்ஙனம் சாரதாம்பாளின் தம்பலம் பெற்றுக் கவிதை பெற்றாரென்பதைத் தமிழ் நாவலர் சரிதை யின் கண் ‘ சரசுவதி தம்பலங் கோடுக்கக் கவிதை யுண்டாகிய கூத்த முதலியார் அரும் பகைத் தோள்ளா யிரம் பாடும்போது விக்கிரமசோழன்கேட்டு ஒரு கவியை ஒட்டச்சோல்லேன்று சோன்னபோது பாடியது'' என் னுந் தலைப்பொன்றுங் காணப்படுகின்றது.

இவ்வாறு நாமகளின் நலம்பெற்றுப் புலமைநிரம் பிப் பெரும் புகழிற்கு உரியரான புலவர் சோழ மன் னர் பெருநட்புக்கும் உரிமையாளராக விளங்கின ரென்ப.

(5)

இவர் சோழமன்னரைச் சேர்ந்ததும் சமஸ் தானப் புலமை பெற்றதும்.

இவரிங்ஙனம் புலவர் சிகாமணியாய் விளங்கிய காலம் கி பி. 1118 முதல் கி.பி. 1132 வரை அர சாண்ட அபய குலோத்துங்கன் மகன் விக்கிரமச் சோழன் காலமும், கி.பி. 1132 முதல் கி.பி. 1162

வரை அரசு புரிந்த குலோத்துங்கன் காலமும், கி. பி. 1162 முதல் கி. பி. 1200 வரை அரசு புரிந்த ராஜ ராஜன் காலமுமாம். இதனை,

"சூடிய சீர்தந்த வென்றெடுத்த கூத்தனுலாச்
சூடிய விக்கிரமச் சோழனும்—பாடிய
வெள்ளைக் கலியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனும்—தெள்ளித்தன்
முன்னு யகரினவன் மூதுலாக் கண்ணிதொறும்
பொன் னுயிரஞ் சொரிந்த பூபதியும்.

(சங்கரச்சோழனுலா)

என வருதலால் கூத்தர் விக்கிரமச்சோழன் முதலாக மூன்று சோழர்களைப் பாடினுரென்றறியப்படும். இவர் இச்சோழர் மூவர்காலத்தவ ரென்பது நன்கறிந்தது. இது புராதன சாசன ஆராய்ச்சியுடையார் பலருடைய கருத்துமாகும்.

இம் முச்சோழ ராட்சியிலும், விக்கிரமச் சோழ னுட்சியின் பிற்பகுதியிலும், குலோத்துங்கச் சோழ னுட்சியிலும், ராஜராஜன் முற்பகுதியிலுமே தான் நமது புலவர் இருந்திருக்க வேண்டுமென்று துணிய லாம். இப் புலவற்குச் சிறப்பீந்த அரசனும் குமார குலோத்துங்கனே.

கூத்தர் விக்கிரமனை யடுத்திருந்த சிலகாலத்திற் குள் அரசனது அருநட்பைப் பெரிதுமடைந்து அர சிளங் குமரற்குக் குருவாய்த் திகழ்ந்து வருங்காலை அரசன் விண்ணுலகேற இளவரசுப்பட்டம் தன் அருமைச் சீடற்குக் கிடைத்தது. பின்னர் தங்குரவர் பால் இக்குமார குலோத்துங்கன் பெரிதும் அன்பு

கொண்டு தனது சமஸ்தானத்துக்குப் பரிசுபெற வருகிற இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுணர்ந்த புலவர்களுடைய கல்விகளைப் பரீக்ஷைசெய்கிற அதிகாரமாகிய 'சமஸ்தான வித்துவான்'' என்னும் உத்தியோக மளித்துச் செல்வம் வாகனம் முதலான பல சிறப்புக்களை வேணமட்டுந் தந்து, தனது தந்தையினும் அதிகமாக மதித்துத் தானுமவராணைக் கடங்கி, ஓர் தெய்வப்புலவனெனப்பக் கொண்டாடி வந்தனன். கூத்தரைப் பாவலரும் நாவலரும் பணிந்து கொண்டாடி வருவர். கல்விப்பொருளோடு செல்வப்பொருளும் நாளுமதிகரித்தது.

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து
அல்ல லுழப்ப தறிதிரேல்—தொல் சிறப்பின்
நாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலர்ந்து. (நாலடியார்.)

என்றபடி கல்வியிருந்தாற் பொருளில்லாமையும், பொருளிருந்தாற் கல்வியில்லாமையுமான வழக்க மிருப்பினும் அவ்விதிக்கு விலக்காக நமது புலவரிடம் இருவகைப் பொருளும் அமைந்த சிறப்பு வியப்பிற் குரியதாமன்றோ? இதனை,

'நாவீற்றிருந்த புலமா மகளோடு நன்பொற்
பூவீற்றிருந்த திருமாமகள் புல்லநாளும்
பாவீற்றிருந்த கலைபாரறச் சென்ற கேள்விக்கோ.''

(சீவக சிந்தாமணி.)

எனக் கூறுவதே பொருத்த முற்றதாகும்.

(6)

## இவரது மேன்மையும் குலோத்துங்கன் பட்டாபிஷேகமும்.

இனிக் குமார குலோத்துங்கனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யக் காலம் வாய்த்தது. இச் சுப காரியத்திற்குத் தாமே தலைமை வகிக்கவும் நேர்ந்தது. விக்கிரமச் சோழனிறக்குங் காலத்துத் தம் புதல்வனுக்கு இளவரசுச் சூட்டி மகுடாபிஷேகத்தை வெகு சிறப்பாக முடிக்கும்படி தமக்குக் கட்டளையிட்டவாறு கூத்தர் குமார குலோத்துங்கனுக்கு வெகு வைபவமாகப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்தார். அச் சமயத்தில் அந்தணர்கள் வேத மந்திரங்கள் கூறி ஆசீர்வதிக்கப் பாவலர்கள் பாமாலைசூட்டி வாழ்த்த ஒட்டக்கூத்தர் அரசனுக்கு க்ஷேமமுண்டாகும்படி தாம் ஒருகவி பாடவேண்டுமென்று தொடங்கி,

"ஆடுங்கடைமணி நாவசையாம லகிலமெல்லா
நீடுங் குடையைத்தரித்த பிரான்"

என முடிக்கு முன், அச் சோழன் தமக்காசிரியர் முறையிலிருக்குங் கூத்தர் தம்மைத் துதித்தல் மாபல்லவென்று கருதி எஞ்சிய பகுதியை,

—கித்தகவம்

† பாடும் புலவர் பணிகொண்ட கூத்தன் பதாம்புயத்தைச்,
சூடுங்குலோத்துங்கச்சோழனென்றேயெனைச்சொல்லுவரே
(தமிழ் நாவலர் சரிதை.)

எனப் பாடிச் சிறப்பித்தனன்

† இதற்கு மேற்கோளான செய்யுளொன்று 1909ஆ மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் நமது பதிப்பாக வெளிவந்த

படிக்காசப் புலவர் சரிதமொன்றில் அடியில்வருமாறு காணப்படுகிறது.

"கூடுந்திரை கொண்டிவன் வேலைபார்த்துக் குறுகலர்கள், தேடுந்தென்மாவைக் கறுப்பனெங்கோ னெஞ்சிவிகை தனைப், பாடுந் தமிழ்ப்பெருமா னொட்டக் கூத்தன் பதாம் புயத்தைச், சூடுங்கு லோத்துங்க சோழனைப்போல சுமந்தனனே."

அது கேட்ட வான்றோர் பலரும் அவ்விளவ லுடைய முதுக்குறைவுக்கு வியந்த சிந்தையினராகி அவனுடைய களங்கமற்ற கருத்தைக் குறித்து "அகளங்கன்" என்னும் பெயரிவனுக்கே தகுமெனக் கொண்டாடினரென்ப. இதனால் அவ் வரசனுக்கு நல்லாசிரியராகிய இவர் பக்கல் உள்ள நன்மதிப்பும் நன்றியறிவும் விளங்குவதோடு இவரதடிமேல் அரசன் தமது முடிவைத்து வணங்கும் பெருமைவாய்ந்தவ ரென்பதும் நன்கு விளங்கும். இதனை முருகதாசர் தமது "புலவர் புராணத்தில்,"

எத்தனை புலவரோமுன் னிறைவரை வயஞ்செய் துற்றா
ரத்தனை பேருளாரு மருந்தமி ழொட்டக்கூத்த
னுத்தவர் முடிமேல் தத்தா ளுறவைத்த தில்லையில்லை
யித்தனை யதிட்ட மன்னேற் கிசைந்தமை யேற்றந்தானே.

எனச் சிறப்புடன் விளக்கிய வாறறிக.

(7)

இவர் கவிச்சக்ரவர்த்திப் பெயர் பெற்றது.

"தக்கயாகப் பரணி" யிறுதிக்கண், "வாழி கவிச்சக்ரவர்த்தி கூத்தனே" "கூத்தன் கவிச்சக்ரவர்த்தி வாழியே" என வருதலான் அந்நூலே இவர் பாடின பரணி என்பதும், இவற்குக் "கவிச்சக்ரவர்த்தி"

என்னுமொரு சிறப்புப்பெயரும் உளதாமென்பதும் உணர்ந்துகொள்க. சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணி பாடியும், செட்டிகள்மேல் இசையாயிரம் பாடியும் அபயனுற் கவிச்சக்கரவர்த்தி சிறப்புப் பெயர் பெற்றுற்போல, இவர் 'அரும்பைத் தொள்ளாயிரம்' பாடியும் "தக்கயாகப் பரணி" பாடியும் உலா முதலியனபாடியும் விக்கிரமச்சோழன் முதலியோரால் அச்சிறப்புப்பெயர் புனையப் பெற்றவராவர். அன்றியும்,

இன்னும் புவியிற் புன்கவிகளில்லை யுண்டேற்றலையறப்ப, மென்னுங் கொடிகளெழுத்தார்ப்ப வீட்டிபாடியரித்ததலை, முன்னக் துதிப்ப வெழுப்பு மருண் மூர்த்தியாகும் புலவர்பிரான், பொன்னங்கமலப் பூஞ்சரணம் புறத்து மகத்தும் புகழ்ந்துய்வாம். (வல்லான் காவியம்)

கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்,
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூவில் விண்ணோர்,
காக்கண்ட செங்கைக் கவிச்சக்ரவர்த்திநின் கட்டுரையாம்,
பாக்கண் டொழிவர்களோ தமிழ் பாடிய பாவலரே.

(தமிழ் நாவலர் சரிதை)

என வரும் செய்யுட்களானும் இப் புலவர் பிரானுக்கு இப் பெயர் பிரசித்த மென்பதறியப் படுகின்றது.

(8)

## இவர் கல்விப்பெருமையும் புலவர்களைச் சிறையிலிட்டதும்.

நம் புலர் சமஸ்தான வித்துவானக விளங்கிய காலத்துத் தமிழுக்கோர் பேருதவிசெய்து வந்தாரென்பது அவரது சரித்திரங்களினின்றும் பெறப் படுகின்றது. அத்தகைய உதவியை யாதோ சில

காரணங்களால் உருவகப்படுத்தி உயர்வு நவிற்சியாய் கேட்டார் அருவருக்குமாறு இயல்வதை நோக்கின் எம் மனம் மிக வருந்துகின்றது.

தமிழில் அரை குறையாய்க் கல்வி கற்று வித்துவான்களெனப் பெயர் வைத்துக்கொண்டு சன்மானம் பெற வருபவர்களை அரசவையிற்கூட்டி அவர்களது கல்வியைச் சோதித்துத் தக்கவாறு தண்டித்திருந்தனர். சிலரைச் சிறைப்படுத்துதலும் சிலரை நாணச் செய்தலும், சிலரைச் சன்மானிக்காது வந்த வழியனுப்புதலும் இவரது தண்டனைகளாம்.

இங்ஙனம் இப்புலவர் கொண்ட கொள்கை கல்வியின் அருமையைத் தெரிவிக்கத்தக்க ஓர் நல்ல வழியெனக் கொள்க. இவ்வாறில்லாவிடில், அக்காலத்தும் இக்காலத்துப்போலவே சிற்றறிவுடையோரும் பேரறிவுடையோர் போலவே பண்டிதர், மகா பண்டிதர், கவிராயர், வித்துவான், வித்துவ சிரோமணி என்பவை முதலாகக் கண்டது கண்டபடி பலபட்டப் பெயர்களை எவரும் கொடுக்கவேண்டிய அவசியமில்லாமல் தாங்களே சொந்தத்தில் வைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரிவார்கள். இத்தகைய துர்வழக்கத்தை நிறுத்துவதற்கு ஏதுவானதினுல் இவர் செய்துவந்தது லோகோபகாரமான காரியமென்றே எண்ணத்தகுந்தது.

இக்காலத்தில் வழங்குகிற அங்கிலப்பாஷைப் பரீட்சைக்கு உரிய பட்டங்களை அப்பரீட்சையிற் றேராதார் வைத்துக்கொண்டாற் குற்றமாவதுபோலவே

முற்காலத்திலும் தகுதியல்லாதார் பட்டப்பெயர்க ளை ஏற்பது குற்றமாகக்கொண்டனர் போலும் அக்காலத்து அரசர்கள், பிரபுக்கள் முதலாயினோர் தகுதியுடைய பண்டிதர்களின் அந்தஸ்தை உள்ளபடி யறிந்து, அதற்கு ஏற்ப வெகுமானங்கள் செய்தார்கள் என்பதோடு தகுதியல்லாதார் புலவர்களென்று நடித் தால் அவர்களைத் தண்டிப்பதற்கு வேண்டிய சாதன மாகவு மிருந்தனரென்பதி லையமின்று.

இவ் வழக்கிருக்கச் சிலர் இப்புலவர் கவிபாடி வருபவர்களை யெல்லாம் காரணமின்றிப் பிடித்துச் சிறைச்சாலையி லடைப்பித்துச் சயலட்சுமி, சம்பத்து லட்சுமி, சகலகலா வல்லி இவர்களின் அம்சத்தின ளாய் தேவி கொலுவீற்றிருக்கின்ற நவராத்திரி கால த்து அவர்களை வெளிப்படுத்தி, இருவரிருவராகக் குடுமியோடு குடுமி முடியிட்டு இறங்கி நிற்ப நிறுத்திப் பிடாரிக்கு இராட்டைக்கடா வெட்டுவதுபோல (அப் பிடாரியினுங் கொடியாளாகிய அத்தேவிக்கு முன்) சற்று மிரக்க மென்பதில்லாமல் அவர்கள் தலைகளைப் பதைக்கப் பதைக்க வெட்டி வழக்கமாய்ப் பலி செலு த்தி வருவதுண்டெனவும், அதுபற்றிக் கூத்தரைக் குறித்துப் பிற்காலத்தார்,

"இரண்டொன்றாய் முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியோட்டக் கூத்தனில்லை"

எனப் பாடியிருக்கின்றன ரெனவும்,

இவ்வழக்கப்படிப் புகழேந்திப்புலவர் சிறைச் சாலையின் கணிருந்த காலத்திலும், அநேகவித்துவான்

2

களைப் பிடித்து அதி லடைத்துவைக்க, அதையவரறி ந்து, ஐயோ! சண்டாளன் பாவமென்பதும், பழியென் பதும் பாராமல் தம்மைப் போன்ற புலவர்களை இவ் வாறு சிறைப்படுத்தி வெட்ட மனந்துணிந்தானே என விசனங்கொண்டவராய், அச்சாலையிற் பலவகைக் குற்றவாளிகளா யடைபட்டிருப்பவர்களுள் தாழ்ந்த குலத்தரான அம்பட்டன், குயவன், தச்சன், தட்டான், வேளாளன், இவர்களைத் தெரிந்தெடுத்து, அச்சிறை யிருப்பிலேயே சம்பிரதாயத்துடன் இலக்கிய இலக்க ணங்கள் பயிற்றி அதிக சமர்த்தர்க ளாக்கினர் எனவும், பின்னர், நவராத்திரி சமீபித்தபோது பத்தா நாளாகிய விஜயதசமியன்று தேவி சன்னதிக்கு முன்னே இரண்டு பக்கங்களினும் இடப்பட்டுள்ள ஆச னங்களில் கூத்தரும் குமாரகுலோத்துங்கனும் கத்தி யுருவிய கையினராய் வீற்றிருப்ப, அடைக்கப்பட்டிரு ந்த புலவர்களைச் சிறைச்சாலை யதிகாரி சென்றழைக்க, அவர்கள் ஐயோ தெய்வமே! இன்றைக் கேறக்குறைய நூறுபேர் வரையில் அனியாயமாயிறக்கும்படி சம்ப வித்ததே என வயிறு கலங்கக் கண்ணீர் ததும்ப வெளிவர, அதுகண்ட புகழேந்திப்புலவர் மனம் வரு ந்தி சொற்ப கல்வியினரை முன் விடுக்கின், அப்பெ ரும்புலவன் கேட்கும் அரிய கேள்விகட்கு உரிய பதிற்சொல்லாமல் திகைக்கவேண்டி நேரிடுமே, அது கண்ட பாதகன் அனியாயமாய்ப் பதைக்கப்பதைக்க வெட்டி யெறிவானே என்றெண்ணி, அன்னவரைப் பின்னிறுத்தித் தம்மிடத்திற் சந்தேக விபரீதமறக் கல்விகற்ற அம்பட்டன் முதலிய அறுவரை ஒருவர்

பின்னொருவராய்க் கூத்தர் முன் செலவிடுத்தன ரென வும், அவர்களவ்வாறே சென்று புலவர்கேட்ட கேள் விக்குத் தக்கவாறு பாக்களால் விடை கொடுத்தனர் எனவும், அதனுற் கூத்தர் அவமானமடைந்து வெட்கி முகங்கருகி அதுகாறும் அவரைப் பிடித்திருந்த அகங்காரமாகிய பேய் விட்டுத் தொலைந்ததெனவும் பரம்பரையாய் வழங்கிவருவதற்கேற்ப,

மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி
யானைமுன் வந்தெதிர்த்தவ னாடா. (கூத்தர் வினு)

"கூனையும் குடமும் குண்டு சட்டியும்
பானையும் வனையு மங்குசப் பையல் யான்"
(குயவன் விடை)

"விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன வில விலக்கப், புண்பட்ட நெஞ்சொடு மிங்கு நின்ருய் பொட் டையாய் புகல்வாய்" (கூத்தர் வினு)

"கண்பொட்டையாயினும் அம்பட்டன் நான் கவிவா ணர் முன்னே, பண்பட்ட செந்தமிழ் நீயுந் திடுக்கிடப் பாடுவனே." (அம்பட்டன் விடை)

செல்வன் புதல்வன் திருவேங்கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொன்னபேரைக்குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்டமாட்டிப் பகைவர் முன்னே
அல்லும் பகலுமடிப்பேன் கவியிருப்பாணி கொண்டே.
(கோல்லன் விடை)

சொன்ன சந்தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசேர்
இன்ன சந்தக்கவியே தென்றபோதி லெதிர்த்தவரை
வன்னசத் தங்கெட வாயைக் கிழித்திக்த வாச்சியினுற்
கன்னசந்தங்க ளிற்கவி யாப்பைக் கடாவுவனே.
(தச்சன் விடை)

நிகிரிவட்டக்குடைச் செங்கோலபயன் செழுஞ்சிலம்பிற்
பகுநியொட் டக்கூத்தப் பட்டனே காணப் பணேகவியின்
மிகுதவொட் டத்ரட்டி விட்டகையோட்டி ஹுருக்கிக்குத்திப்
புகுதவொட்டித்தட்டிமேலனுகாவண்ணம்போர்செய்வனே
(தட்டான் விடை)

† கோக்கண்டு மன்னர் குரைகடற்புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவாதொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக்கூத்த நுங்கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்களோ தமிழ்பாடிய பாவலரே.
(வேளாளன் விடை)

சேலேய்விழிமட வாரிற் செங்காலன்னஞ் சேர்பழனப்
பாலேய்மணவயிற் கூத்தநின் போலியர் பாப்புனேந்த
நூலேய் துகளறத் தூய்தாக்கு கோன்மை நுவல்தல்லால்
மேலேய் தமிழ்ப்புல வோரென்னே யென்ன விளம்புவதே.
(வண்ணுன் விடை)

எனச் சில பாக்களும் கடைவீதிப் புத்தகங்களில் நிலவுகின்றன. இனி, இதன் உண்மையை ஈண்டு சிறிது ஆராய்வோம்—

நாம் தமிழ்மாதின் பெருமையை யுன்னி முயல்வது பரோபகாரக் காரியங்களுள் முதன்மையானதெனினும், உள நடுக்குறச் செய்யும் இத்தகைய

---

† இது தமிழ் நாவலர் சரிதையில், கவிஞரை வெட்ட வேண்டாமென்று நெற்குன்றவாண முதலியார் பாடியது என்னுந் தலைப்பின் கீழ்க் காணப்படுகிறது.

"கோக்கண்டு மன்னர் குரைகடற்புக்கிலர் கோகனகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்திலபூவில் விண்ணோர்
காக்கண்ட செங்கைக் கவிச்சக்ரவர்த்திநின் கட்டுரையாம்
பாக்கண் டொழிவர்களோ தமிழ் பாடிய பாவலரே."

கொடுஞ்செயலை மருவியிருந்தன னொருபுலவனெனின் எவரும் ஆமோதியார் என்பதே எமதெண்ணம் ஆகையாலிவ் வசம்பாவிதத்தை மறுப்பதற்கேற்ற சில காரணங்கள்கூறி உண்மை யிதுவெனத் துணிவோமாக.

முதன் முதலில், இச்சம்பவத்தைக் குறிக்கும் சாஸனமேனும், மேற்கோளேனும் இதுவரை கிடைத்தில. "குட்டுதற்கோ" எனுந் தொடக்கத்ததாய செய்யுளொன்றே இதைச் சுட்டுவதாகவுள்ளது. அதுவும் மிக்க சமீபத்திலுண்டான தனிப் பாடலேயன்றிப் பழங்காப்பியத்துக் கண்டதாய் ஆதாரமில்லை. இச்செய்யுள் கர்ண பரம்பரையாய் வழங்கிவந்ததை நம்பிப் பிற்காலத்தார் சற்றுப் பெருக்கி உருவகப்படுத்தியிருக்கின்றார்கள் என்பதே எமது துணிபு.

அல்லாமலும் இக்கொடுஞ்செயலைப் புரிந்துவந்தவர் ஒரு புலவரும், அதற்குதவியா யிணங்கியவன் ஓர் அரசனுமன்றோ? இஃது எவ்வளவு பொருத்தமுடைத்து என்பதைச் சற்று விசாரிப்போம்.

புலவர்களுக்கு இத்தகைய வன்குணம் வந்துதிப்பதை யாண்டும் யாருங்கேட்டிலர். இதனால் புலவராயினோர்க்குக் கொடூர குணமே இருந்ததில்லை யென்பதல்ல. இவ்வாறு வன்னெஞ்சினனாய்க் கொலைப்பாவத்தை ஏற்கத் துணிபவனவனே புலவன் என்பதுதான் பெருஞ் சங்கை. மேலும் புலவர்கள் இனிய குணத்தராய், யாரையும் மகிழ்விக்க நிற்குஞ் சாந்த குணத்தராய் இருந்து வந்தனர் என்பதில் ஆக்ஷேபமேயின்று. புலவர்களைச் சமஸ்தானங்களில் வாழ்வித்த

தும் இங்ஙனம் எதிர்பார்த்துத்தான். இதை விட்டு நல்லவோர் சுபதினத்தில் நாடெங்கணும் மகிழ்வெய்தி யிருக்குங்காலைத் தமிழைப் பெரிது மதித்து அருமையாய்க்கற்று, அதனுல் சன்மானம் பெறவரும் புலவர்களைச் சிரத்தோடு கிரஞ்சேர்த்திச் சேதித்துக் களித்தனரென்றுல், இதன் உண்மை எவ்வளவில் நிற்குமென்பதை இதனைப் படிக்கும் அன்பர்களே நிதானித்துக்கொள்ளவும்.

மற்றொரு விஷயத்தையும் நோக்கிக் கவனிக்க வேண்டும். காரண மின்றியோர் காரியமில்லை யாதலால், இக்கொலைத்தொழில் எதன் காரணமாக விருக்கலாம்? பொருள் கருதியேனும் புகழ் கருதியேனும் இருக்குமோ வென்னில்? இல்லை. பொருளும் புகழும் இவ்வழியாகப் பெறுவதற்கு இவர் வீரரன்று, வீரரும் இத்தொழிலைக் கொடூரமென மதிப்பரென்னில் ஓர் புலவன் செய்யத் துணிவானே? தமக்கு ஜன்மவிரோதியா யிருந்து தீங்கிழைத்து எதிர்த்துப் போர் செய்யும் பகைவராயிருப்பினும், போரிற்றோற்றுத் தம்வசமானுல் அவர்களைத் துணித்தெரியத்துணியாது பட்ட காயங்களைப் பரிவுடனுற்றி மேற்கொளும் பேரிரக்கத்தையுடையோரெனில், புலவர்களுக்குக் கொலைக்குணம் வருமென்பதை யார்தான் ஏற்கமுன் வருவார்,

தமிழ்மாதை யணிபெறச் செய்வான் இங்ஙனம் மேற்கொண்டாரென்னில், இவ்வாறு கற்றவ ரனைவரையும் செற்றனரென்னில் யார் தான் தமிழை யோதுபவராவர்? யார்தான் ஓதிய பயனை எய்துபவராவர்?

தமிழுணங்கின்பாடு அன்றே ஒருவாறாய் முடிந்திருக்கு மன்றோ? பின்னரிவர் அவளை யணிபெறச் செய்வது எங்ஙனம்?

பொறாமையினால் இதைத் தழுவினர் என்னில் அப் பொறாமை எத்தகைத்ததோ அறிகுவோம். அஃது எத்தகைத்ததாயினும் சற்றும் மனமிரங்காமல் வரிசை வரிசையாய் வதைத்திருந்தார் என்பது ஒப்பவுளதோ? மேலும் இவர் பிறர்பால் பொறாமை கொள்வதற்கு எள்ளளவேனும் ஏதுவில்லை. இவரே தக்க வித்தை யைக்கொண்டு அரசற்குக் குருவாயும் அரசனால் பெரு மையாய் மதிக்கப்பட்டவராயும், குறைவிலாச் செல்வ முடையராயும் இருக்குங்கால் பொறாமை எதற்கு?

இறுதியாகத் தன்னுயிராங்கு மன்னுயிரைக் காக் கவேண்டிய மன்னன் இவரை ஆதரித்திருப்பானே வென்பதையுங் கவனிக்கவேண்டும். கொலைக்குக் கொலையே யன்றிச் சொற்குற்றம் பொருட் குற்றங் களுக்குக் கோறற்றண்டனை யிலையே. மனங்கொண்ட வாறு இப்படி யிரண்டொன்றாய் முடிந்து தலையிறங் கப்போட்டு வெட்டவிட்டால் மற்றும் மாந்தர்கள் வாளாவிருப்பரோ? அக் காலத்தில் இராஜாங்கம் இருந்த நிலைமைக்கு அரசன் கதி என்னவா யிருக்கு மென்றெண்ணுவது? ஆகையால் இவ்வகோரச் செ யல் நடந்திராதென்றே நாம் நினைக்கவேண்டும்.

இக் கொடுஞ் செய்கையைப் புலவர் கைக்கொண் டிரார் என்றால், மற்று மெவ்வளவோ புலவர்களிருக்க இவரை மாத்திரம் இத்துணைக் கொடூரமாய் யாரும்

நினைப்பது யாதுகாரணம்பற்றி யென்பதோர் கேள்வி பிறக்கும். இப்புலவர்பெருமான் தனது இளம்பருவத்திருந்தே மேம்பட்ட செல்வவந்தராய் அரசனது தயவையும் அவனது பணிவையும் மேற்கொண்டிருந்தாராதலால், இவர் மமதைப் பேயின் வயத்தராய் வழுவி நடந்திருக்கலாம் என்று தோன்றுகின்றது. அகம்பாவம் யாவையும் ஒழிக்குமாதலால் இவர் கொண்ட மமதையால் பாமரர், பாவலர் முதலியோரது அன்பையிழந்தவராய் சற்றுமாறுக வெண்ணப்பட்டு, கர்ண பாம்பரையாய்த் தாழ்த்திக் கூறலாயினர். இத்துட்டப்பேயை வழிபட்டோர் யாவரேயாயினும் மற்றவர்களிடையில் பெருந்தாழ்வெய்துவரென்ப திழுக்காகாது. இக்காரணம் பற்றியே பிறர்பால் வசையெய்தினரே யல்லாமல் வேறெதையுங் கொண்டன்று. இச்செயல் கொண்டே அம்பட்டன், தட்டான், கொல்லன் முதலியோர் பாடல் புனைந்து நம்மிடையில் உலவும் சில கவிகளைக் கற்பிக்க நேர்ந்ததெனக் கூறி இவ்விஷயத்தை முடிப்போம்.

இவர் ஈட்டியெழுபது பாடியதும் செங்குந்த சிரஸாஸன மிட்டதும்.

* 'ஈட்டி யெழுப' தென்பது நமது புலவர் பெரு

---

* ஈட்டி யென்னும் ஆயுதத்தைச் செங்குந்தர்கள் பார்வதியாரிடத்துப் பெற்றாரென்பதை,

'சலம் பிரியாத சூட்டுச் சாவற் கேதன மெஞ்ஞான்றும்
வலம்பிரியாத செவ்வேட் குறுதுணையாக மன்னுட்
குலம்பெற்றுவந்தா ரென்றங் கொடியுமைதந்த வீட்டி
நலம்பெறு மித்தக் குந்தர் பரிசுபோனுட்டிலுண்டோ.'

மானுகிய கூத்தர் தம்மரபினராகிய * செங்குந்தர்களின் வேண்டுகோளின்படி தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெண்மர் சிரங்களை ஆசனமாகப்பெற்று, அதன்மீதெழுந்தருளித் தங்குலத்திற்குரிய ஆயுதமாகிய ஈட்டியைச் சுட்டிப் பாடியதோர் பிரபந்தமாம். இங்ஙனம் தெய்வீகம் விளங்கப்பாடும் பேரறிவாளராகிய இப்பெருந்தகையாரது மெய்வைத்த வரலாறு இக்காலத்துப் பல்வேறுவகையான் வழங்கப்படுவதால் அவற்றினதுண்மை கண்டறிவது பிரயாசையாகவே முடிகின்றது. செங்குந்த மரபினர் பெருமையாதிய விசேடங்கள் அன்னார்க்குரிய சிறந்த நூல்களாம் "கந்தபுராணம்" "சேங்குந்த புராணம்" "வீரநாராயணர் விஜயம்" முதலியவற்றில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.

இனி ஈட்டி எழுபது பாடிய வரலாறும் அதனைப் பாடினர் மேவருஞ் சிறப்பும், பாடப்பட்ட இடமும் காலமும் அதனைக் கேட்டோனின்னனென்பதுமாதிய விஷயங்களை முறையே விளக்குவாம்.

கலைமகள் அருள்பெற்ற வரகவியாகிய கூத்தர் ஒரு சமயத்துத் † "திரிபுவனம்" என்னும் ஊரின் கணுள்ள தமது பெரு நண்பினரான "சோமன்" என்பவனைக் காணவேண்டிச் சென்றிருந்தாரென அறியப்

---

* செங்குந்தர்—பகைவாது உதிரத்தாற் சிவந்த ஈட்டியை யுடையவர்.

† இது திருவிடை மருதூர்க்கு நேர் மேற்கில் ஒரு மைல் தூரத்திலுள்ளது.

படுகிறது. அங்ஙனம் சோமன் மனைக்குச் சென்ற சமயம் இது போழ்தென அறியக்கூடவில்லை. சோமன் மனைக்கண் இவரிருந்தபோது † ஆவூர்ச் செங்குந்தர்கள் கூத்தர்பால் பாடல்பெறவேண்டுமென்னும்ஆவலுடன் புலவர் பெருமானைத் தக்கவாறு சென்று கண்டுகொண்டனர். கூத்தரும் தம்மினத்தார் நல்வரவேற்றதற்கு ஆனந்தங்கொண்டு, அவர்களுடன் நகைமுகமும் இன்சொலுமாய் அளவளாவி யிருந்தனர். இங்ஙன மிருக்குமிடையில் செங்குந்தர்கள் கூத்தரை நோக்கிப் புலவரேறே! வேளாளர்க்கு ‡ ஏரெழுபதும், வன்னியர்க்குச் ‖ சிலையெழுபதும், செட்டிகட்கு § இசையாயிரமும் அவரவர் மரபின் இயலை விளக்குவதாயிருக்கின்றது. அதுபோல் நம்மரபினர்க்கும் நீவிர் ஒருநூல் செய்து நமது குலத்தைச் சிறப்பிக்கவேண்டும் என்று வேண்ட, புலவர்பிரான் அவர்களை நோக்கி, ஐயன்மீர்! இயல்பிற்றானே பல சிறப்போடுங் கூடி விளங்கும் நமது குலவன்மையைப்பற்றிப் பாடுவிக்கவேண்டில் நம்மினு முயர்ந்த வருணத்தனொருவனால் பாடுவித்தலன்றோ வழகு? நம்மிற்றாழ்ந்தோனாற் பாடுவித்துக் கொள்ளுத லழகன்று. ஆகவே நம்மை நாமே சிறக்கப் பாடிக்கொள்வது அதனினும் குறைவன்றோ? இதனை நீங்கள் உய்த்துணர்மின்கள் எனக்கூறித் தமக்குள்ள அபிப்பிராயத்தைக்

---

† இது கும்பகோணத்தைச் சேர்ந்த பட்டீச்சுரத்திற்குத் தெற்கில் காவேரி யாற்றிற்கு அக்கரையிலுள்ளது. ‡ இது கம்பர் பாடியது. ‖ இது கம்பர்பாடியது. § இது சயங்கொண்டார் பாடியது.

காட்டினர். இவ்விடையால் தம்மெண்ணங் கூடப் பெறுதொழிந்தமைக்குப் பெரிதும் வருந்திய இவர்கள் முடிவில் பெருஞ் சினங்கொண்டவராகி இப்புலவன் நமது மரபினனாயிருந்தும், நமது பிரபாவத்தை விளக்கவல்ல ஓர் பிரபந்தம் பாடித் தரும்படி கேட்டுக் கொண்டால், நம்மின் மேலான குலத்தானொருவனைக் கொண்டு பாடல்பெறும்படி கூறிவிட்டானல்லவா? இவ்வுலகிற் புன்கவிகளா யுள்ளோர் வெளிப்படின் அவர்களை எனது வீரவாளால் பொன்றுவிப்பேனென்று வெற்றிக்கொடித்தம்பம் நாட்டித் தான் கற்றுள்ள கல்வியில் மாத்திரம் அபிமானம் வைத்துள்ள இவன், தான் பிறந்துள்ள குலத்திற் சற்றும் அபிமானமில்லாதவனாயிருக்கின்றான். இத்தகையனை நாம் இவ்வுலகிலிராதபடிக் கொன்றுவிடுவதே சரியென்று தங்களுக்குள் நிச்சயித்துக் கொண்டவர்களாய் உடனே வளை தடி, வாள் முதலிய ஆயுதங்களேந்தி அவரிருக்குமிடத்தை நாடி வந்தார்கள். அது கண்ட கூத்தர் திடுக்குற்றுப் பயத்தால் சோமன் பாலோடி அடைக்கலம் புகுந்தனரென்ப.

இவை "தமிழ் நாவலர்சரிதை" யில் பழிகாரர் தொடர்ந்தபோது கூத்தர் சோமன் வாசலிலே ஓடிச் சொன்ன கவியென்னும் தலைப்பின் கீழ்

"அடையென்பார் தள்ளென்பா ரன்பொன்றில்லாமற்
புடையென்பார் தங்கடைக்கேபோகேங்கொடையென்றான்
முந்துஞ்சோமாபுவனை முன்னவனே நின்கடைக்கீழ்
வந்துஞ்சோ மாதலான் மற்று."

சோமன் தன்பால் அடைக்கலம் புகுந்த புலவரைக் காத்தல் வேண்டித் தன்னொருமகனையும் பேழையுள் வைத்துத் தன் மனையைச் சூழ்ந்த அப்பழிகாரர்பால் தந்து "இதன்கணுள்ள உங்கள் புலவனாகிய கூத்தனை நீங்கள் விரும்பியவாறு செய்மின்" எனக் கூறி விடுப்ப, அப்பழிகாரர் அப்பேழையைத் தனித்தவிடத்துக்குக் கொண்டுபோய்த் திறந்து பார்த்தவள்வில், தாம் கருதிய புலவரைக் காணாமற் சோமன் மகனுதல்கண்டு, சோமனது வன்மையை வியந்து அம்மகனைக் கொலை செய்யாது விடுத்துச் சோமன் பாலெய்தி, நிகழ்ந்ததுரைக்கச் சோமன் பழிகாரரை நோக்கி, நீங்கள் புலவன் விரும்பியபடி செய்தால் பாடாதிரார் என்றுரைத்தனர். இதனிடையில் கூத்தர் நிகழ்ந்த விஷயமுணர்ந்தவராய்ச் சோமன் பெருமித குணத்திற்கும், தம்பால் வைத்துள்ள பேரபிமானத்திற்கும் பெரிதும் வியந்து அவனைப் புகழ்ந்து பாடினரென்ப.

இஃது "தமிழ்ச் செய்யுட் சிந்தாமணி" யில்

"தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன் றானுரைப்ப
துன்னுடைய சீர்த்தி யுயர்நலமே—துன்னுபுகழ்
சோமா திரிபுவனத் தோன்றலே நின்புகழை
யாமா ருரைக்க வினி.

என வருதலானறிக.

பிறகு, புலவர் தம்மைக் கொல்லவந்த பழிகாரரை நோக்கி, ஓ செங்குந்தத் தலைவர்காள்! அடியேன் புகல்வதைப் பொறுமையோடுங் கேண்மின், பெரும்

புலவர்களாயுள்ளோர் தேவர்களையும், அரசர்களையும், தமக்காதரவாயுள்ள பிரபுக்களையும் அபிமானத்தாலேனும், பொருள் வேட்கையாலேனும், தனியே புராணங்களேயாக, பிரபந்தங்களேயாக அவர்களது சரித முன்னிலையில் வர்ணித்துப் பாடுதல் மரபு. ஓர் குலத்தினை அக்குலத்தினர் வேண்டுகோளாலேனும், தன்னிச்சையாலேனும், வறிதே வர்ணித்தல் யாது பயன்?

வளம்பட வேண்டாதார் யார் யாருமில்லை
யளந்தன போக மவரவராற்றான்
விளங்காய் திரட்டினாரில்லை களங்கனியைக்
காரெனச் செய்தாருமில். (நாலடியார்.)

என்னும் ஆன்றோர் வாக்கியம் நீங்கள் அறிந்துள்ளதே. ஆதலால் நான் நமது குலத்தை வர்ணிக்கமாட்டேன். தம்மைத் தாமே பாடிக்கொண்டார்களென்னும் அபவாதத்தையும் நமது குலத்திற்குத் தரமாட்டேன், உள்ளதையே கூறி யாவரையும் உறுதிகொளச் செய்வேன். தங்குலத்தி லபிமானமும், பிறகுலத்தில் துராபிமானமும் வகிப்பவன் யானன்று. எனது இயல்பு இவ்வண்ணமாயினும் "உலைவாயை மூடலாம் ஊர்வாயை மூடுதற்கோர் உரை யறிதல் அரிது." மேலும், சோழராஜாக்களாற் கிடைத்துள்ள செல்வம் எண்ணில வாதலின் எனக்குப் பொருளாசையில்லை யென்பதை இவ்வுலகே உணர்த்தும். ஒவ்வோர் சமயத்தரும் தத்தஞ் சமயத்தையே மேலெனக் கூறி வாதித்தல் போல, ஒவ்வொரு சாதியருந் தத்தஞ் சாதியையே மேலாகப் பேசி வாதிடுதல் வழக்கு. அவ்வழக்கு முடிவி

விழுக்கா மென்றதற்குச்சான்று அவ்வக்குலத்தினரது தொழில் விகற்பமேயாம். இத்தகைய சமயத்தையுஞ் சாதியையும் பற்றி ஓர் பிரபந்தங் கூறுமிடத்து, அப் பிரபந்தத்தால் யாதேனு மோர் அற்புதப் விளையின் அதுவே யிவற்றை எல்லாவற்றினு மேலெனக் கொள் ளச் சாதனமாக்கும்? அடியேன் நவவீர பரம் பரையாகிய செங்குந்தர் மரபிற் றோன்றியுள்ளேனுயி னும் என்வாக்கில் சத்திய லட்சுமியும், சாரதாதேவி யும் சாசுவதமாகக் குடிகொண்டிருப்பது மெய்யே யாகில், அவர்கட்கு ஸகஸ்ர நாமார்ச்சனையின் பொரு ட்டு நங்குலத் தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெண்மர் சிரங் களைப் பரிசாகத் தருவிரேல் நமதாயுதமாகிய ஈட்டி யைச்சூட்டி ஓர் பிரபந்தம் பாடி முடித்து இவ்வுலகி னரை வியக்கச் செய்கிறேன் என்றார்.

இவ்வாறு கூத்தர் தலைப்பிள்ளைகளின் தலைப்பரிசு வேண்டியதைச் செவியுற்ற செங்குந்தர்கள் வியப்புந் திகைப்புங்கொண்டு ஒன்றுந் தோன்றாது வாளாநிற்க புலவர் தமது மரபிற் தோன்றிய முன்னோருடைய வீரசூரச்செயல்கள் பலவற்றை நயம்பெறப் பளீரென மனத்திற் பதியுமாறு விவரப்பட நன்கு விளக்கி அவர் கள் ஒருமுகமாக இணங்கும்படி தமது பிரசங்கத்தாற் செய்தனர். அஃதுணர்ந்த *கைக்கோளர்கள் அதிக

* கைக்கோளரென்பது ஒழுக்கத்தின் கொள்கையோ ரென்ப. கைக்கொள்ளுவரென்னுந் தொழிற் பெயரின் தனி வினையாகிய கொள்ளென்னும் பகுதி கோளென நீண்டு பலர்பால் அர்விகுதி புணர்ந்து கோளர் என்றாயிற்று. (இலக் கணக்கொத்து வினையியல் 2-வது சூத்திரம்.)

உற்சாகங்கொண்டவர்களாகி யாவரும் ஏகமனதாய்ச் சம்மதித்து அவ்வாறேயாகுக வென்று கூறிக் கூத்ததரால் ஓர் நன்னாளைக் குறித்துக்கொண்டு விடை பெற்றுச் சென்றனரென்ப.

இஃது புலவர் புராணத்துள்,

மற்றைய குலத்துளோர் நம்மகிமை நன்குணரவேண்டி,
யிற்றையீ தரங்கேற்றற்கா யிரந்தலை தருதிரீண்டப், பொற்
றைமீதிருந்து சொல்வேனென்றவன் பொருக்கென்றீந்தா,
ரற்றையாங் குரைப்பக் கேட்டோ ரதிசயித்தயர்ந்தாரம்மா.

எனக்காணப்படுகிறது

பின்பு கூத்தர் தமதருமை நண்பரான சோமனிடம் கடிதில் விடைபெற்று, உறையூரடைந்து, ராஜராஜச் சோழனைக் கண்டு புவனையில் ஆவூர்ச் செங்குந்தர்க்கும், தமக்கும் நடந்த சம்பாஷணைகளையும் தமக்காகச் சோமன் காட்டிய நன்றியின் விசேடத்தையும், இனித் தாம் நடத்தப் புகுங் காரியத்தையும், அது நடைபெறுங் காலத்தையும் விளம்பினர். அது கேட்ட வேந்தன் வியந்த சிந்தையனாகிக் கவிப்பெருமானின் புலமையாற்றலுக்குப் பெரிதுங் களித்து அத்தெய்வீகம் நிகழும் சுபதினத்தை எதிர்பார்த்திருந்தனனாக.

கூத்தர்பால் விடைபெற்றுச் சென்ற செங்குந்தர்கள் இனி யாகவேண்டி யிருக்கும் பெருவிஷயத்திற்காக ஓர் சபைகூட்டி, அதிற் பிரபந்தம் பாடும் பொருட்டு உத்தேசித்துள்ள காரியாதிகட்குச் செய்ய வேண்டுவன இவையென்று தீர்மானஞ் செய்து

அதனை ஓர் திருமுகமாக்கித் தங்களை யொத்த நாட்டினர் பலர்க்கும் விடுத்தனர்.

திருமுகம் பெற்ற நாட்டாருள் * ஒரு நாட்டாரொழிய ஏனையரெல்லாம் திருமுகத்திற் குறித்தபடி மிக உற்சாகத்துடன் தமது எஞ்சாப்புகழ் துஞ்சாதிருக்கவும், தமது துணிவும் தீரச்செயலும் பிறரறிந்து வியக்கவும் பிரபந்தம் பெற்றுப் பீடுறுவதே பெருமையெனக் கருதித் தலைப்பிள்ளைகள் ஆயிரத்தெண்மர் சிரங்களை ஆங்காங்கு கண்டித்து, அவைகளை வண்டிகளிலுய்த்து உறையூரிலுள்ள சோழனது அரண்மனைக்கண் கொண்டுவந்து கூத்தருக்கு அறிவித்தனர்.

அஃதுணர்ந்த கூத்தர் செங்குந்த வீரர்களின் தீரச் செய்கைக்கும் வாய்மையாதிய மேம்பாட்டிற்கும் பெரிதும் வியந்து அவர்கள் கொணர்ந்துள்ள சிரங்களைச் சோழ வேந்தனது சபாமண்டப வாயிலில் சிங்காதனம்போல் அடுக்கி, இரத்தப் பாவாடை விரித்து அலங்கரித்து வைமின், அவ்விடத்து யாம் வருவோம் என்று கூறினர். அவ்வாறே யவர்கள் அரசனது சபா மண்டப வாயிலை யடைந்து, அங்குள்ளோர் யாவரும் பயந்து நடுங்கிப் பிரமித்து வியக்கும்படியாக

* இந்நாட்டினர் தலை கொடுத்தற்கு அஞ்சினராதலால் நாளது காறும் "தலைகோடாமாபினர்" என வழங்கி நின்று மற்றைய நாட்டினரோடு மணவினையாதிகளிற் சம்பந்தங்களற்று திருமலைநாய்க்கன் பட்டினத்திற்கருகே தங்குல வொழுக்கங்களிற் குன்றாது தனியே யிருப்பவரென்றறிக.

ஆயிரத் தெண்மர்கள் சிரங்களை வரிசைப்படச் சிங் காதனம்போல் அடுக்கிக் கூத்தர் வரவுக்கு எதிர் பார்த் திருந்தனரென்ப.

வரச்சிங் காதன வளவர் தம்பிரான்
றரச்சிங் காதனந் தன்னி லேறியே
துரைச்சிங் காதனந் தொழுங் கவிக்கிடுஞ்
சிரச்சிங் காதனச் சீர்செங்குந்தமே.

(ஈட்டி யெழுபது)

மெய்யுளுக்காத நன்னுலைப் படைத்தவர் மெய்யிற் சற்று, மையுளுக்காநமற் கோலைவிட் டோர்வெற்றி வாள் கொடேச்சி, கொய்யுளுக்கா வணமென்றே கவியொட்டக் கூத்தன் சொன்ன, செய்யுளுக்காச் சிரப்பாவாடை யிட்ட வர் செங்குந்தரே.

(செங்குந்தர்மாலை.)

ஒருபக லிமையம் பூத்த வுமைசிவம் புதித்து வையம்
பெருகு செங்குந்தாரும் பீடுயர் சிரங்கை யேந்தி
மருவியே யொருங்குகூடி மன்னவை மாடம்புக்குக்
குருமணித் தவசிதென்னக் கொட்டின ரனந்தமாக.

(வீரநாராயணர்விஜயம்)

என வருஞ் செய்யுட்களால் செங்குந்தர்கள் கூத்தர் பாடலுக்குத் தலை தடிந்து ஆசனமிட்டு இரத்தப் பாவாடை விரித்தமை யுணரப்படும்.

இராஜ ராஜச் சோழன் தமது சமஸ்தான வித்து வானகிய கூத்தரால் நடைபெற விருக்கும் தெய்வீக சம்பவத்தைக் காணவேண்டி மந்திரி, பிரதானியர், பந்து வர்க்கத்தினர், வித்வஜனர், கடை காப்பாளர், கருமாதி காரர் ஆதிய தமக்குரிய அங்கங்களோடும் மற்றும் அங்கு வந்து கூடிய நகரமாக்களுடனேயும் சபா

மண்டபத்தை யடைந்து அவரவர்க்குரிய இருக்கைகளிலிருந்தனர்.

பூதவுடம்பழிந் தொழிவது திண்ணமென்பதையும், புகழுடம்பு அழியாது புகழ்பெறுவது உறுதியென்பதையும் ஆராய்ந்துணர்ந்த செங்குந்தர்கள், பிரபந்தம் பெறுங் காரணம்பற்றி அரசனது சபாமண்டப வாயிலில் அறுத்துக்குவித்த அரிய சிரங்கள்,

மானவராகப் போந்த பயனது வந்த தென்ன
வானனம்பானு நோக்கியலரா விந்தப் பூக்கண்
மானமிக்கிருந்த சில்ல வள்ளலாரருளை யுன்னி
மோனமுற்றிருந்தபோலுந் தோன்றின முடியனந்தம்.
(வல்லான் காவியம்.)

துண்டவெண் பிறையார்க் கென்றுந் தொண்டரியாமெனற்குச் சான்றின், புண்டர நுதலிற் றோன்றப் பொலிந்தன முடியனந்தங், கண்டகர்க் காயுமாபோற் கனநகைக் கோட்டஞ் செய்து, கொண்டன வென்னக் காணக் குறிக் கொண்ட சிரங்கள் சில்ல. (வல்லான் காவியம்)

என்னும்படி துலங்கிக் கொண்டிருந்தன,

அது சமயம் கூத்தர் நமது நித்திய கர்மானுஷ்டான்ங்களை விதிப்படி முடித்துக்கொண்டு, உபாசனமூர்த்தியைப் பூசித்து அப்பூஜாகோலத்துடன் தமக்குரிய பல விருது வரிசைகளோடு மங்கல வாத்தியமுழங்கச் சபாமண்டபத்திற்கு எழுந்தருளி, அங்கு தமக் கமைத்துள்ள சிரச்சிங்காதனத்தின் மீதிவர்ந்து, பதுமாசன மிட்டு வீற்றிருந்து, இனிக் கூறப்புகும் நூல் இடை யூறின்றி இனிது நிறைவேறுமாறு இரு கரங்களையும் தமது சிரத்தின்மீது கூப்பிக் கலைமகளைத்

துதித்து வணங்கி முதலில் விநாயகர் காப்பும் பாயிரமும் கூறிப் பின்,

பூதலம் வாழ்க குந்தர் பொலிவுடன் விளங்க நான்கு
வேதமெந் நாளுமோங்க வேதியர் பசுக்கள் பல்க
மாதவர் வளவன் செங்கோல் வளமை குன்றாதுமிற்க
வேதமே யறையும்பொன்னி யுறந்தையுஞ் சிறக்க மாதோ.

எனத்தொடங்கி,

செந்தமிழ்க் காகப் போந்து சிவந்த பாவாடையாக
நந்தமக் கிடுங்கா லெந்த நகரமு முளம் வியந்த
வந்தாத்தமார் வாழ்த்தி யணிமலர் மாரி பெய்தா
ரிந்தச் செங்குந்தர்பெற்ற விசையெவர் பெற்றாரம்மா.

எனவரும் எழுபது பாடல்களால் தமது குந்தக் குலத்தைப் புகழ்ந்து "ஈட்டி யெழுபது" என்னும் நூலியற்றித் தாமிருந்த சிரச்சிங்காதனத்தினின்றும் இழிந்தன ரென்ப. இதுவே,

பூவார் புவனையிற் சோமன் றரும்பழி போனபின்பு
நாவாணர் போற்றிய நாடகங் கேட்ப நலமுடனே
யாவாணர் செங்குந்தராயிரத் தெண்டலை கொய்திரத்தப்
பாவடை யிட்ட துலகமெல்லாம் புகழ் பாலித்ததே.
(பாயிரம்)

எனவரும் ஈட்டி யெழுபதாலும்,

ஈட்டியை வியந்து பூவார் புவனை யென்றெடுத்துச் சொற்ற
பாட்டகத்தோறும் வென்றிப்பல சரிதத்தோர்.........

என வல்லான் காவியத்தாலும் குறித்ததாகும்.

இச் செய்தி நிகழ்ந்தது குமார குலோத்துங்கன் மகன் இராஜ ராஜன் காலத்தி லென்பதை,

முத்தமி ழிராசரா ஜேந்திரன் முன்னமே
சுத்த வீரத்திறந் துலங்கு தற்கொரு
பொய்த்தலை கொடுத்தலிற் புகழ் பெறுதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே.

(ஈட்டி யெழுபது.)

எனவரு மாற்று னுணர்க.

இவரது அரசாட்சிக் காலம் கி. பி. 1162 முதல் 1200க்கு மேல் சில ஆண்டுகள் வரையும் எனவறிக.

இவ்வீட்டி யெழுப தென்னும் பிரபந்தத்தைக் கல்வித்திரமுடைய சோழனும் மகிழ்ந்து கேட்டன னென்பதை,

கோட்கவி கொண்டு மாக்கள் கொடுந்தமிழ்கூற நீத்துத்
தாட்கவிப் புதிய வாட்டத் தலைக்கடை தூங்கு சாட
வாட்கவிகொண்ட மன்னன் வளவனு மகிழ நாமே
நாட்கவிபாடு நாட்போலிருப்பது பெரிய நாடே.

(ஈட்டி யெழுபது.)

என வருதலானுணரப்படும்,

இப்பிரபந்தம் உறையூரின் கண்ணே பாடப்பட்ட தென்பது இந்நூல் முதற் செய்யுளாகிய "பூதலம் வாழ்க என வரும் செய்யுட்டொடக்கத்தே "வேதமே யுறையும் பொன்னியுறந்தையுஞ் சிறக்கமாதோ" என வரும் ஈற்றடியான் உணரப்படும்.

பாண்டிய பல்லவ சக்கரவர்த்திகள் தங்கள் நெடிய ஆட்சிக்கு முக்கிய இராஜதானியாக மதுரையையும், காஞ்சியையும் வகுத்துக்கொண்டதுபோல சோழ சக்கரவர்த்திகள் தங்கள் ஆளுகைக்கு உறையூர், தஞ்சை, குடந்தை முதலான நகரங்களை இராஜ

தானியாகக் கொண்டாரென அறிதல் வேண்டும். இவ்வுறையூரை டாலமி சோர்னகாஸ் இராஜாங்க பட்டணமான ஓர் "தௌரா" என்கிறார். உறந்தை என்பதும் இதுவே. இந்நகரம் காவிரி யாற்றின் தென்கரையிலுள்ளது. இக்காலத்திலும் உறையூரென்னும் நாமத்தையே வகித்து திரிசிராப்பள்ளிக்குப் பக்கத்தே உள்ளது. சுமார் 1800 வருஷங்களுக்கு முந்திய அக்காலத்தில் இப்பட்டணம் ஓர் கோட்டையாலும், அதன் வெளியே ஓர் அகழியாலும், அதன் புறம்பே ஓர் காவன் மரக்காவாலும் சுற்றுப் பட்டிருந்தது. "சிலப்பதிகாரத்தில்" நாடுகாண் காதையில்,

"உறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கி"

என்பதனு லறிக.

மேலும், இந்நகரத்திற்குக் "கோழியூர்" என்றும் பெயருமுண்டு. "முற்காலத்து ஓர் கோழி யானையைப் போரில் வென்றதால் அந்நிலத்திற் செய்த நகர்க்குக் கோழியூரெனப் பேராயிற்று" என்பது அடியார்க்கு நல்லாருரை. சிலப்பதிகாரத்தில் மேற்படி காதையில்,

"முறஞ்செவி வாரண முன் சமமுருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர்"

என்றுள்ளது. இங்ஙனஞ் சீரும் சிறப்பும் பெற்றிலங்கிய இந்நகர் இத்தகைய தெய்வீகங்கள் விளங்கிப் புகழ்தற்குரிய சிறந்த நிலைக்களமாக விருந்ததென்றால் இதன் பெருமை அளவிடற்பாலதோ?

பிறகு கவிச்சக்கரவர்த்தியாகிய கூத்தர் மீண்டும் அச்சிரச்சிங்காதனத்தைப் பார்த்து சரஸ்வதி தேவியினுடைய திருவுருவை மனத்திற் றியானித்து,

"கலைவாணி நீயுகிலிருப்பதுவும் கல்வியுணர்கவிவல்லோரை, நிலையாகப் புரப்பதுவு மவர் நாவில் வாழ்வதுவு நிசமேயன்றோ, சிலைவாண ஞயிருந்தா யிரம்புயங்க ணேரிந்துமுயர் சீவனுற்றுன், தலையாவி கொடுத்திடுஞ் செங்குந்தருயிர் பெற்றிட நீதயைய செய்வாயே.

என்னும் பாடலைக் கூறிப் பிரார்த்திக்க, முன்னம் அவ்வுடம்பை விட்டு அறுபட்ட சிரங்கள் சென்று மீண்டும் அவ்வுடம்போடு சேர்ந்து ஒன்றியிட மாண்ட பிள்ளைகள் மீண்டும் எழுந்தனர். சகல கலாவல்லியின் திருவருட் பேறுற்றவர்க்கு எதுதான் சாத்திமாகாது? இதுபற்றி யன்றோ

"காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
யாசுக்குக் காளமுகி லாவனே —; தேசுபெறு
மூசுக்குக் கூத்த னுவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு;"

"நாட்டிற் சிறந்தவரெல்லா நடுங்க நராதிபர்முன், பூட்டேச்சிம்மாசன ராயிரத் தெண்மர்க்கும் போனவுயிர் மீட்ட" கவிச்சக்கரவர்த்தி,

எனவரும் தனிப்பாடல்களில் அறிஞர்கள் மொழிந்து வைத்தனர்.

இவ்வைபத்தை அரசனுதிய அவையினர் யாரும் கண்டு வியந்து இது கவிச் சக்கரவர்த்தியின் வல்லபந்தானே? செங்குந்த வீரர்களின் மாறுபடாத வீரந்தானே? கலைமகளின் சிறந்த திருவருளேயோ? எத்தகையோர்க்கும் அற்புதத்தை விளைக்கும் இத்தினக் காட்சி புதுமை! புதுமை!! எனக் கொண்டாடினர்.

இவ்வாறு துணியப்பட்ட தலைகளையும் உடல்களையும் ஒட்டப்பாடிய காரணத்தால் அதுமுதல் இவர்க்கு "ஒட்டக்கூத்தர்" எனப் பெயர் சிறந்த தென்ப.

அன்றியும், விக்கிரமச்சோழன் திருமுன்னர் இவர் முதன் முதல் எய்தியபோது அவன் இவரது "அரும்பகைத் தொள்ளாயிரத்து" ஓர் செய்யுளைத் தனக்கு ஒட்டப் பாடச் சொல்லியதனு லென்றும், "விக்கிரமச் சோழன் உலாப்" பாடியபோது ஒரு கண்ணியை ஒட்டப் பாடெனப்பாடி யதனுலென்றும், அங்ஙனம் பலமுறை ஒட்டப்பாடிய சிறப்பால் ஒட்டக்கூத்தரெனப் பெயர் பெற்றன ரெனவுங் கூறுப "ஒட்டம்" என்பது பந்தையம் வைத்துப் பாடுதலென ஒரு பொருளுண்டென்பது யாழ்ப்பாணத்து அகராதியிற் கண்டது.

விக்கிரமச்சோழன் உலாப்பாடியபோது ஒரு கண்ணியை யொட்டிப் பாடென்றபோது கூத்தர் பாடியது:—

*கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே—வைய
மளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான்.

அரும்பகைத்தொள்ளாயிரம் பாடும்போது விக்கிரமச்சோழன் கேட்டு ஒரு கவியை ஒட்டச்சொல்லென்று சொன்னபோது கூத்தர் பாடியது :—

---

* இதன் முதலடி இரண்டும் விக்கிரமச்சோழன் உலா 158-வது கண்ணியிலும், அதன் இறுதி வெண்பாவிலும் காணப்படுகிறது. 'தளர்ந்தாளிம்மான்' எனவும் பாடம்.

†கடித்தது கச்சா வுச்சியினுச்சி மதிலிலங்கை
பிடித்தது வென்ற திருபது தோள்பதி னெண்பகலே
முடித்தது பாரதம் வீரப் புலிவைப்ப மூரிச்செண்டா
லடித்தது பொற்கிரி விக்ரமச் சோழ வகளங்கனே.

எனத் தமிழ் நாவலர் சரிதையிற் காணப்படும் செய்யுட்களாலும்,

"வெட்டத்தா மிருகூருகி விழுந்தவர் தம்மை யெல்லாங், கிட்டப் பார்த்திருந்தோர் மெச்சக் கிளர்ந்த வேலவனைப்போற்று, மிட்டத்தாற் பழைய வண்ண மிலங்கிடப் பொருத்தி விட்டா, னொட்டக் கூத்தனெனு நாமமுலக முற் றுறைத்த தன்றே.'

(புலவர் புராணம்)

" ஈடற்றவம்பலக் கூத்தன்றலைத்த விசேஷித்தரும்
பாடற்புனைந்த பின் மெய்யாவுந் தலைபற்றியுயிர்
கூடப்புகலு மெழுப்பேழ்பதா லொட்டக் கூத்தனெனத்
தேடற் கரிய திருப்பேரைத் தந்தவர் செகுந்தரே."

(செங்குந்தர் மாலை.)

—"வீற்று சிரம்"
யாவுந் தத்தம் முடலோடாகி யுயிர்ப்பான் புரிந்து
கூவு மொட்டக் கூத்த னென்பேர் கொங்ளுங்கை.

(செங்குந்தர் திருக்கை வழக்கம்.)

என வரும் பாடல்களாலும் இவர் ஒட்டப்பாடுதலிற் சிறப்புடையாரென்பது தெளியப்படும். ஒட்டன் - ஒட்டுதற் றொழிலுடையவன். ஒட்டனாகிய கூத்த

---

† இது முத்தொள்ளாயிரம், வச்சத்தொள்ளாயிரம், சயங்கொண்டார் செட்டிகள் மேற்பாடிய இசையாயிரம் என்பன போல்வதொன்றாம். இலக்கண விளக்கப்பாட்டியல் 88-ஆம் சூத்திரவுரைக்கண் 'அரும்பகைத் தொள்ளாயிரம்' என ஒரு நூல் காட்டப்பட்டது இதுவே போலும்.

னென்க. ஒட்டக்கூத்தர் என்று பெயர் சிறந்த காரணம் இதுவாக, இதனைச் சிலர் வேறாகக் கூறுதலுமுண்டு.

இத்தகைய ஒப்புயர்வற்ற சிறப்பு தமக்கும் தமது சாதிக்கும் அக்கைக்கோளர்களால் உண்டானமையை,

நிலைதந்தார் புவியினுக்கும் யாவருக்கு மானமதை
நிலைக்கத்தந்தார், கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய்
திட வென்றே கையிற்றந்தார், விலைதந்தார் தமிழினுக்குச்
செங்குந்த ரென்கவிக்கு விலையாகத்தான், தலைதந்தாரெ
னக் கொட்டக்கூத்தனெனும் பெயரினையுந் தாந்தந்தாரே.

என்று இவர் தாமேபுகழ்ந்து கூறியுள்ளார். இவ்வரலாற்றில் செங்குந்தர்கள் தமிழின் மாட்டு வைத்திருந்த பேரபிமானமும், இணையற்ற சூரத்தன்மையும், மனத்துணிவும், ஆத்மத்தியாகமும் விளங்குவதோடு, ஒட்டக்கூத்தருடைய தெய்வப் புலமையும், உண்மை நிலையும், உறுதிப்பாடும் அவரிடமிருந்த சரஸ்வதி கடாக்ஷமும் மற்றும் அவரது உத்தமகுண விசேடங்களும் நன்கு விளங்கும்.

இவ்வளவே ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபது பாடிய வரலாறாகும். இப் பெரியாரது காலம் இன்றைக்கு 720 எழுநூற்று இருபது வருஷங்களுக்கு முந்தியதாமென்னலாம். இவரிருந்த திட்டமானகாலத்தை மேல்வரும் "கூத்தரும் அவர் வாழ்ந்த காலமும்" என்னு மகுடத்துத் தெளிவாகக் கண்டுகொள்க. கி பி 1162 முதல் 1200 வரையும் அரசுபுரிந்த இராஜராஜச்

சோழன் காலமே ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபது பாடிய காலமாம்.

(10)

## இவர் தக்கயாகப்பரணி பாடியதும் கொலைக்குற்றந் தவிர்ந்ததும்.

"தக்கயாகப்பரணி" யென்பது வீரபத்திரக் கடவுளின் வெற்றியை நாற்சீரடிப் பாடல்களால் பாடியதோர் பிரபந்தமாம். 'கலிங்கத்துப்பரணி" "மோகவதைப்பரணி" "அஞ்ஞவதைப்பரணி" "அண்டத்துப்பரணி" என்பனபோல இதுவுமொன்று. பரணியென்பது போர்முகத்து ஆயிரங்களிற்று யானையைக்கொன்ற வீரனைத் தலைமகனாகக் கொண்டு கடவுள் வாழ்த்துங் கடைதிறப்பும், பாலைநிலமுங் காளிகோயிலும், பேய்களோடு காளியுங் காளியோடு பேய்களுஞ் சொல்லத் தான் சொல்லக் கருதிய தலைவன் சீர்த்தி விளங்கலும், அவன் வழியாகப் புறப்பொருட்டோன்ற வெம்போர் வழங்க விரும்பலும் என்றிவை யெல்லாம் இருசீரடி முச்சீரடி யொழித்தொழிந்த மற்றைய வடியாக ஈரடிப்பஃறொழிசையாற் பாடுவதாம். இப்பிரபந்தம் சோழர்களின் பஞ்ச சிங்காதனங்களி லொன்றுகும் குடந்தைபம்பதியில் இராஜராஜச் சோழன் காலத்திற் கூத்தராற் பாடியது. இப்பரணி பாடப்பட்டவாலாறு வீரசிங்காதன புராணத்துள் "அகளங்கச் சருக்கம்" என்னும் பகுதியிற் காணப்படுகிறது. இவ் "வீரபத்திரப்பரணி" இன்னும் அச்சிடப் பெறவில்லை. வீரசிங்காதன புராணத்தை 1904-ம் வருடத்தில் சிதம்பரம் ஈசானியமடம் ஸ்ரீமத்-

இராமலிங்க சுவாமிகள் அச்சிட்டபொழுது, அதனை நன்காராய்ந்து அவற்றுள் காணப்பட்ட புராணக் கதைகளை இனிய செந்தமிழ் நடையில் எழுதித் தமிழ் நாட்டினர்க்கு உதவியதில் இதனையு மொன்றாகத் தந்த அவர் கருணைக்கு நன்றி செலுத்துகின்றோம். யாமெழுதிவரும் ஒட்டக்கூத்தர் சரித்திரத்திற்கு இப்பகுதியும் அவசியமாகத் தோன்றியதால் அப்புராணத்திற் கண்டபடியே அநேகமாகத் தழுவியும், விடுபட்ட சிலவற்றை இடையிற் புகுத்தும், இங்கு வெளியிடுகின்றோம்.

"சோழமண்டலத்தே களங்கத்தை யொழித்த சற்குணங்க ளுடைமையால் "அகளங்கன்" எனக் கீர்த்திபெற்ற "ராஜராஜன்" என்னும் பெயருடைய சோழன் செங்கோலோச்சிவரும் காலத்தில் குடந்தை வீரசிங்காதன மடத்தில் தவசிகள் பலர் வாழ்ந்திருந்தனர். அவருளொருவர் முத்தமிழ்விரகராகிய * "ஆளுடைய பிள்ளையார்" தேவாரத்தை யோதிப் பலி யேற்பவர், அவர் திருவீழிமிழலை யீசர் திருப்பதிகத்தை ஓதிக்கொண்டு பலியேற்கு மொருதினம் அத்திருப்பதிகத் துள்ளதாகிய "கல்லானிழற்கீழா யிடர்காவாய்" என்னுந் தேவாரத்தைச் சொல்லிக்கொண்டே ஒட்டக்கூத்தரது மனைவாயிலினிற்க, அப்புலவர் பலவு மறிந்தவராயினும், அத் தேவாரப்பொருளைப் பலகாற் சிந்தித்தும் விளங்காமையின் மயங்கி அச் சிவயோகியாரை "இத் தேவாரத்தின் பொருள் கூறுக" என்று கேட்டனர். அவ் யோகியார்

* திருஞானசம்பந்தர்.

சினந்து 'இதன் பொருள் யானறிந்திலேன். நீ யறிந்துரைப்பினும் அத்தேவாரத்தின் ஒருமொழி யேனும் நிரம்புமோ' என்றனர். விருப்பமிகும் இன்னிசையோடு பாடுதலால் நிச்சயித்தற் கரிதாயிற்றாகலின் அதன் பொருள் யாது என்று கேட்டவழி, அவர் அதன் பொருளை மொழியாது வசை மொழிந்தன ரென்று பெருங்கோபங்கொண்டு அச் சிவயோகியாரைப் புலவர் கசையைக்கொண்டு அடிக்க அவரும் மடிந்துவீழ்ந்தார். மாறுபட்ட மனத்துடன் பெருஞ் சினங்கொண்ட ஒட்டக்கூத்தர், அழிவற்ற சிவனடியாற்கு இவ்வாறு அழிவியற்றித் தம்மனையடைய, அச் சிவயோகியார் வசிக்கும் மடத்திலுள்ள சங்கமர்கள் இச் செய்தி கேட்டலும் பெரிதொலித்தெழுந்து, ஆசிரியரை யிறைஞ்சி அனுமதி பெற்று வில், வாள், அம்பு முதலிய ஆயுதங்களை யேந்தியவராய் அப்புலவர் மனையை அடைந்தனர். இவர்கள் வருவதை முன்னரே அறிந்த புலவர் அரசனை யடைந்து நடந்ததனைத்தும் அறிவிக்க, ஒரு பசுங்கன்றின் பொருட்டுத் தன் புதல்வனைத் தேர்க்காலி லிடறிய சோழன் குலத்திலுதித்த ராஜராஜன் கேட்டுப் பெரிதும் மயங்கிக் கலங்கி, இப்பெரும்பழிக் கென்செய்வதென்று நடுங்கிநிற்க அத்தருணத்தே ஆங்கு புலவரிருப்பதை யறிந்த சங்கமர்கள் அரசன் திருமுன்பெய்தி நடந்ததை முறையிட்டார்கள். அம் முறைப்பாடு கேட்ட மன்னன் "சிவபெருமானுக்குரிய வடிவம் குரு, லிங்கம், சங்கமம் என மூன்றாகுமென்று வேதாகமங்கள் இயம்பாநின்றன. இவ் வொட்டக்கூத்தர் இவற்றை யெல்லாம் அறிந்தும் தம்மனையிற் பலிக்

செய்தி யாதொரு குற்றமு மிலராய் நின்ற சிவ யோகியாரைக் கொன்று நம்பாலடைந்தனர். இதற்கு யாதுபுரிவம்?" என்று வருந்தி அச்சங்கமரை நோக்கி "அடிகளே! இச் சங்கமக் கொலைக்குச் சிவாகமங்களில் விதித்த பரிகாரம் யானே புரிகின்றேன்" என்று பணிந்தனன். சங்கமர், "அக் கூத்தனை நாங்களே ஒறுத்தற்குரியேம். ஆதலால், அவனைக் கொண்டாலன்றி மீளேம்" என்று உறுதியாக நிற்க; அரசன் புலவரை வேறோரிடத்திற் சேமித்து வைத்துத் தன் புதல்வனை மந்திரியால் அழைப்பித்து "எனக்கு நேர்ந்த குறையை மாற்றுவாயாக" எனத் தன் மகனை வேண்ட, அவனும் 'பிதாமாக்கள் இயம்பியது யாதாயினும் அது தவமென்று கொள்வதே மைந்தர் கடமை; சூரிய குலத்தவருள் தந்தை, ஆசிரியர் இவர் சொற்களைக் கடக்கும் கொடியோரை இப்பூமி தாங்காது, நரகமே தன்பாற் கொள்ளும், மனைவி, புத்திரர், செல்வ முதலியவை அருமையல்ல; கீர்த்தியொன்று அரியது. உடலம் நிலையன்றென்பதை அறிந்தும் அதைப்பொருளாக்கி உம துரையைக் கடப்பவனல்லேன். என்னை உமதிஷ்டப்படியே செய்க" என்றனன். இவற்றைக்கேட்ட மன்னவன் மகிழ்ந்து மகனை மூடு பல்லக்கில் ஏற்றித் திரையிடுவித்துக்கொண்டு அவையை யடைந்து, சங்கமரைநோக்கி, "சங்கமக் கொலைபுரிந்த இவனை நீர் நோக்குவதுந் தகுதியன் றாதலால், ஓர் மறைவிடத்தில் வைத்துக்கொல்க" எனக் கூறிவிடுத்தான்.

இவ்வாறு இச் சோழன் தன் மகனைச் சங்கமர்க்குதவியதைத் தனிப்பாடலொன்றில்,

அன்றளிற் குமுணன்றன் சிரசையீந்தா
 னகளங்கச் சோழனொரு பிள்ளையீந்தா
னென்னுருந் தமிழ்க்கூத்தன் கவிதைக்காக
 வோராயிரஞ் செங்குந்தர் முதற் றலையையீந்தார்
பைன்னாக மணிகொடுத்தா னொருவேளாளன்
 பறைபனே டொக்கவுண்டா னன்னைசோம
வின்றளிலடி பொறுத்தான் பிரமராய
 னின்றகவி யுகராய னினியமாலே.

எனக் காணப்படுகிறது.

அரசன் சொல்லை மதித்து அச்சிவிகையுடன் ஓரிடத்தைச் சேர்ந்தபோது, அச் சங்கமருட் சிலர், "இவன் ஒட்டக்கூத்தன்தானோ? என்று முகத்தைப் பார்த்துத் தெரிந்துகொண்டு பின் கொல்லவேண்டும். செய்யுங் கருமத்தைத் தெளிந்துகொள்ளாமலே செய்யின் அது மனத்துன்பத்துக்கு ஏதுவாகும்" என்ன, இதுகேட்ட அனைவரும் அவ்வாறே பார்க்க விசைந்து சிவிகைத் திரையை நீக்குதலும் அரச னுடைய குமாரன் அதிலிருத்தல் கண்டு கவலை கூர் ந்து அவனை அணைத்துக்கொண்டு எல்லாரும் அழு தொலிக்க, அக்குமாரன் 'நீவிர் எண்ணியதை என் பாற் செய்க" என்றனன். அப்பெரியரோ, குழந்தாய்! பாதகமெவற்றினும் கொடிய சங்கமக்கொலை புரிந்த வன் ஒட்டக்கூத்தனா யிருக்க, அவனை விடுத்து இள வரசுக் குரிய நின்னைக் கொல்லும்படி நின் பிதா வஞ்சகம் செய்தான் என்னலும் புதல்வன், "யானும் என் தந்தையும் உடன்பட்டு இவ்விதச்செயல் புரிதலின் நீர் விரும்பி எங்களுடன்பாட்டின்படி புரிவது நீதியாம்" என்றனன். இது கேட்டலும் அப்புதல்வனது அருஞ்

செய்கையை வியந்து கூறி அவனுடன் திரும்பி அரச னிடஞ் சென்று அண்ணலே! உன் அரும்பெறற் புதல்வனைக் கொன்று கொலைஞனாகிய கூத்தனைக் காக்கவெண்ணியது நீதியா? நீதிப்படிப் புலவரை எம்பாற்றருக'' என்றுறுதியாக நின்றனர்.

இம்மொழி கேட்டுக் கலங்கிய வேந்தனது செய லறவு நோக்கி ஒட்டக்கூத்தர் வேறொரு சூழ்ச்சியை உள்ளத்திலுன்னி அரசே! என்னை இவ்வடியர்பால் ஈக; அடைக்கலம் புகுந்த யானே அவர்பால்போக வேண்டும்போது நீர் தருதலால் உமக்கு வருங்குறை யாது?' என்றவளவில் "இதனால் வித்துவாபிமானம் இலனாயினேன், இனி உங்கள் சித்தம்'' என்று அரசன் கூறினன். உடனே புலவரைக்கொண்டு அச்சிவனடி யார் சென்றனர். சூரியன் மேற்றிசை யடைந்தான்.

அக்காலத்தே, புலவரும் அக்கூட்டத்தவரை வணங்கி "யான் முக்காலமும் சிவபூசை செய்யும் நியம முடையேன்; இன்று அந்நியதி தவறிற்று. அது தவறு வண்ணம் விடை நல்க'' என்று கேட்டுக்கொள்ள, அப் பெரியோரனைவரும் அன்புடன் "அதுபுரிக'' என்ற னர். புலவர் அங்குள்ள * அரிசோலாற்நதி யடைந்து ஸ்நானமாடி வெண்ணீறுங் கண்டிகையு மணிந்து, ஐந் தெழுத்தைச் சிந்தித்துச் சிவபெருமானைப் பூசித்து 'என் மனக்கவலை யகல அருள்புரி' எனப் பிரார்த்தித்து, பின்பு அருகிலிருந்த "முளைச்சாளம்மை'' என்னுங் காளிகோயிலை அடைந்து யாவரும் விலகியிருக்குந் தருணம்பார்த்து அக்கோவிலிற் கதவடைத்து தாழிட்

* இது கும்பகோணத்தின் தென்பாலோடும் நதி.

டுக்கொண்டனர். இஃதறிந்த சிவனடியார்கள் பெருங் கோபங்கொண்டு புலவரை எவ்வாறாவது கொல்ல நினையுங்கால், அவருட் சிலர் புலவர் ஆலயத்து ளிருப் பதால் விடிந்தபின் வெளிப்படுத்திக் கொறலே விழுமி தென்று சொல்ல, அதற்குடன்பட்டு அன்றிரவு அவ ரெல்லாங் காவல்பூண் டிருந்தனர்.

உள்ளே இருந்த புலவர் 'இவ்வாபத்தை அகற்றி யருள்வாய்' என்று அக் காளிகாதேவியைப் பிரார்த் தித்த வழி தேவி அவர் முன்புதோன்றி "அருந்தவர்க்கு அநாதித் தெய்வமாக விளங்கும் வீரபத்திரக்கடவுளே எம் குலதெய்வம் என்றெண்ணி, அப்பெருமான் பேரில் ஓர் பிரபந்த மியற்றுக" என்றனர். அது கேட்ட புல வர், 'தேவியே! யானியற்றும் பிரபந்தத்தை நீயே எழுதத் திருவுளம் வைத்தால் விரைவில் முடித்து விடலாம்' என்னலும், தேவியும் சம்மதித்துப் புலவர் சொல்லச்சொல்ல எழுதிவருவா ளாயினள். இங்ஙனம் எழுதும்போது தேவியின் ஒரு கையிலேந்திய தீபம் சிறிது சலனமடைய, அத்தருணம் புலவர் வீராசம் பாடும் நிலைமையிலிருந்ததினால் அக்குணமுடையராய் 'கைத்தீபம் அசைவதேன்?' என்று அத்தேவியின் கன் னத்திலே தங்கரத்தா லடித்து, பின் சாந்தரசம் ஓதுங் கால் தாம்செய்த தவறு தெளிந்து உடனடுங்க, தேவி யும் பரிவுடன், 'இச்செயல் நின்போதமின்றி நிகழ்ந்த தாகலின் அதுபற்றிக் கவலற்க' என்றருளினள்.

இவ்வாறு வீரபத்திரக் கடவுள் வெற்றியை நாற் சீரடிப் பாடல்களால், பரணி என்னும் பிரபந்தமாகப் பாடி முடித்தலும் சூரியனும் இருளகல உதயமாயினன்

காத்திருந்த சிவசரணரும் புலவரை வெளியேறும்படி அழைத்தனர். அதற்குப்புலவர் 'யான் இரவில்வரைந்த தொரு புத்தகம் இஃது' என்று ஓர் துவாரத்தின் வழியே பரணியையீட்ட அதனை வாங்கிவாசித்து இவ்வாறு நம் கடவுள் சரிதத்தை முடித்தது வியப்பு எனக் கூறி, அதனைப் பாராட்டிக் கோபந்தணிந்து குதூகலித்தவராய்த் தங்கைக்கத்தியைத் துவாரத்தின் வழியே நல்கி 'உமதிஷ்டப்படி செய்வீராக' என்று கூறினர். அதுகேட்ட புலவர் 'யான்செய்த கொலை காரணமாக என்னைக் கொல்லத்துணிந்த நீர் இங்ஙனமிசைத்தல் என்? என வினவ அச்சிவசரணர், நம் கடவுள் தக்கன் யாகத்தை அழித்த சரிதத்தை நீர் இனிது பாடி முடித்தமையால், உம்மால் இன்னும் பல பிரபந்தம் பாடிக்கொள்ளலாம் என்பதுட்கொண்டு இக்கைக் கத்தியை யீந்தோம். என்னலும், புலவர் வெளிவந்து வணங்கினர். அவ்வருந்தவர் 'முத்திநாதனென்பவன் முன்கொணர்ந்ததொரு புத்தகம் மெய்ப் பொருணாயனரது இறுதிக் கேதுவாயிற்று; நீர் வரைந்த இந்நூல்தானுங் கொலை தவிர்தற்கு ஏதுவாயிற்று.' என வியந்து, புலவரைப் பலவாறு புகழ்ந்து, அப்புலவர் பிரார்த்தனைப்படி அவர் தீவினைக்குப் பரிகாரமும் இயற்றி யருள் புரிந்தார்கள்.

பின்னர், புலவர் கங்கைவீரேசர் சந்நிதியில் தக்கயாகப்பரணியை அரங்கேற்றி, அப்போது தாம் அடிமைப்பட்ட சங்கமக் குரவராற் பல வரிசைகளும் முத்துச்சிவிகையும் அளிக்கப் பெற்றவராய்த் திரும்பி அரசனவையை அடைந்தனர்.

இது சோழமண்டல சதகத்துள்,

"ஒத்தஹுணர்ந்த நாடனைத்து மொருங்கே கூடியுயர்கூத்தன்
கத்தியலைபத் தூத்தலுங் கசிந்துகாழிக் கவுணியர்கோன்
பத்தியுடனே தக்கமகப் பரணிபாடிப் பணிபமுத்தின்
வைத்தசிவிகை மகிழ்ந்தேற வைத்தார் சோழமண்டலமே."

எனக் காணப்படுகிறது.

கூத்தர் வரவையுணர்ந்த அரசன் மகிழ்வெய்தி எதிர்கொண்டு 'புலவரே! கொலைப்போர் வழக்கு எவ்வாருயிற்று ?' என வினவியதற்குப் பதிலாய் பரணி பாடியது முதலிய செய்திகளை அறிவித்தலும், அரச னுவந்து அவையோர் மகிழ ஒட்டக் கூத்தரை வியந்து புகழ்ந்து வரிசை பல வளித்து விடுக்க, புலவர் தம் மனையினெய்தி அந்தணர் வறியராதியர்க்குத் தான தரும மளித்து முன்போலச் சுற்றத்துடன் சுகமாகக் களித்து வாழ்ந்தன ரென்பதே.

இவ்வளவே, ஒட்டக்கூத்தர் தக்கயாகப்பரணி பாடப்பட்ட வரலாருகும். இவ் வரலாற்றில் கூத்த ரது புலமையும், கவி பாடுந் திறனும், காலமறிந்து செய்யுஞ் சூழ்ச்சியும், நியமந் தவருதொழுகும் நேர் மையும், எதனையுந் தட்டின்றி முடிக்கவல்ல ஆற்றலும், ஆன்ருேர் வாக்கில் அபிமானமும், மற்றும் இவரது மேம்பட்ட குணங்களும் நன்கு விளங்கும்.

இப் பிரபந்தம் ஆதித்த சோழன், அபயகுலோத் துங்கன் ஆதிய பல பெயர் புனைந்த விக்கிரமச்சோழன் மகன் "ராஜராஜன்" அரசாட்சிக்காலத்திற் பாடப் பட்டதாம், இவனது அரசாட்சிக்காலம் கி. பி. 1162

முதல் 1200 வரை எனவறிக. இவற்றிற்கு மேற் கோள் தக்ஷயாகப்பரணி 835, 830, 837-வது செய் யுள்களிற் காணலாம்.

(11)

## நளவெண்பாச் செய்யுளில் ஓராட்சேபமும் விநோதரசமஞ்சரியின் மாறுபாடும்.

" தமிழ் நாவலர் சரிதைக்கண் புகழேந்தியார் "தேவி ஊடலாய்க் கதவை யடைத்தபோது பாடியது" என்னுந்தலைப்பின்கீழ்,

"தூபங் கமழும்பைங் கோதையன் விக்ரம சோழன்மன்னர்
தீபன் புறங்கடை வந்துநின் றானின் றிருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்த்துநின்ற
கோபந் தணியன்ன மேயெளி தோகங் குடிப்பிறப்பே."

என ஓர் செய்யுள் வரையப்பட்டுளது. இதனாற் புக ழேந்தியாரும் விக்கிரமனைப் பாடினாரென்பது அறியத் தகும். புகழேந்தியார் ஒட்டக் கூத்தருடைய நீண்ட ஆயுட்கால முற்றும் இருந்தனரென்பது நன்கு புல னாகவிடினும், கூத்தர் குமாரகுலோத்துங்கன்பாற் சிற க்க வீற்றிருந்த காலத்தளவும், அப்புகழேந்தியாரும் இருந்தனராவர் என்பது, அக்குமார குலோத்துங்கன் காலத்தே இப்புலவர்களிருவரும் தத்தம் புலமை மேம்பாடுணர, ஓரே பொருள் பற்றிப் பாடிய பாடல் கள் சிலவற்றான் ஆய்ந்துணரத்தகும். அப்பாடல்கள் வருமாறு:

"விக்கா வுக்கா வித்தா விப்போய்
 விட்டார் நட்டார் சுட்டூர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே
 யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சு
 மூப்பா டத்தீ வெப்பா டப்பூண்
நெக்கா டக்கா னத்தா டப்போ
 நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

(ஒட்டக்கூத்தர்)

" தற்கோ விப்பூ சற்பா சத்தே
 தட்டா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ விக்கோ விப்பூ சித்தே
 முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்று நெட்டோ டைப்பா ரைச்சேல்
 மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்று ளூர்று லைப்பா கிற்சேர்
 நெய்த்தா னத்தா னைச்சே வித்தே"

(புகழேந்தி)

இஃது திருநெய்த்தான மென்னுந் தலத்தில் எழுந் தருளியிருக்கிற சிவபிரான்மேல் "நெய்த்தானத்தானைச் சேவித்தே" என்பதை மகுடமாக வைத்துப் பாடிய செய்யுட்களாம்.

திக்குகளெட் டுக்கயந் துக்கமுற் றுத்திடுக் கிட்டவுற
மைக்கடற் குட்சாந் தைக்கவிட் டோர்க்கிட மாமதுரா
இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக் கிக்கக்கி விக்குமச்சோலைக் குறுங்குடியே.

(ஒட்டக்கூத்தர்)

எட்டெழுத்தைக் கருத்திற் குறித்திட்டு நித்தம் பரவும்
சிட்டர்கட்குத் திருப்பொற் பதத்தைச் சிறக்கத்தருமவ்
வட்டநெட் டைப்பணி மெத்தையத்தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் துக்குலம் நத்திமுத்தீனுங் குறுங்குடியே.

(புகழேந்தி)

இஃது திருக்குறுங்குடி யென்னுந் தலத்தில் எழுந்தருளியிருக்கிற திருமாலின் விஷயமாகப் பாடிய செய்யுட்களாம்.

இவற்றிற்கு எடுத்துக்காட்டிய தொண்டைமண்டல சதகத்தில்,

நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்தவித்வ,
கோலாகலனொட்டக் கூத்தனை யன்றுதற் கோலியென்று,
மேலார் கவிசொல்லி நெய்த்தானத்தேசென்று * மேவிக்
கொண்ட, மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண்டை
மண்டலமே,

என வருதலாற் இப்புலவர்கள் ஒரே பொருள் பற்றிப் பாடிய உண்மை யுணரப்படும்.

இவர்களுள், புகழேந்தியார் தொண்டைநாட்டுள்ள "களந்தை" என்னும் ஊரினராவ ரென்பது. "மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண்டைமண்டலமே" எனவும், 'ஐயன் களந்தைப் புகழேந்தி யாண்டான்,' 'காரார் களந்தைப்புகழேந்தி' எனவும் தொண்டைமண்டல சதகத்துப் பலவிடத்துங் கூறப்படுதலாற் றெரிகின்றது. இவர் பாடிய நளவெண்பா என்னும் நூலில் "முரணை" என்னும் நகர்க் கணித்திருந்த 'சந்திரன் சுவர்க்கி' என்னுஞ் சிற்றரசனொருவன் புகழப்படுகின்றான். அதனால் அவன் இவரைப்

---

* வென்றுகொண்ட எனவும் பாடம்.

பெரிதும் ஆதரித்தவனென்பது அறியப்படுகின்றது. இம்முரணை நகர் உறையூர்ப்புரத்து மள்ளுவநாட்டின் கண்ணது என்பர்.

இனி இவரியற்றிய 'நளவெண்பா" வின்கணுள்ள சில பாடல்களைக் குறித்து ஒட்டக்கூத்தர் மாச்சரியத் தாற் சில வாதம் நிகழ்த்தினரெனக்கூறுப. ஒரே காலத்து ஒரு பொருள்பற்றியே இவ்விரு பெரும்புல வரும் பாடலுற்ற சில செய்யுட்களால், இவர்கட்கு கல்வியானுய *வீரம்பற்றிய பகையுளதாமென்பது கருதப்படும். அதுபற்றி அறிஞர்க்கு இன்பம் பயக் கும் அரிய பெரியவாதம் நிகழ்த்தினு ரென்பதல்லது, தங்கள் பெருமைக்கு ஒவ்வாத இழிதக்க வாதம் நிகழ்த்தினர் எனக் கூறுதல் சிறிது மியையாதாம். அன்றியும் கூத்தர் வாதத்துக் கிடனுகக்கொண்டது,

"மல்லிகையே வெண்சங்கா வண்டுதவான்கருப்பு
வில்லிகணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது."

(நளவெண்பா.)

என்பதாம். இந்நளவெண்பாக் கருத்து:—

"எல்லியும்போ திருஞ்சிறைவண் டெம்பெருமான் குணம்பாடி, மல்லிகைவெண் சங்கூது மதிலரங்க மென் பதுவே.' (திருமொழி 8. 8.)

---

* "கல்வி தறுக ணிசைமை கொடை யெனச், சொல் லப்பட்ட பெருமித நான்கே" (மெய்ப் பாட்டியல் 9) என் றூர் தொல்காப்பியனூர். பெருமிதம்—வீரம்.

எனப் பெரியாழ்வார் அருளிச் செயலினும்,

" மல்லிகைப் போதில்வெண் சங்கம் வண்டுத "

(திருச்சிற்றம்பலக்கோவை 364.)

எனத் திருவாதவூரடிகள் கோவையினும், செவ்வனம் பயின்றதாதல் கண்டு கொள்க.

இச்செயல் இங்ஙனமிருக்க, விநோதமஞ்சரி மேட்ரிகுலேஷன் தமிழ் உரைப் புத்தகங்களில் இவ் வரலாறு சுத்த அசம்பாவிதமாய்க், கற்பனைக்கு ஏவப்புநிதியாய் முன்னுக்குப் பின் முரண்படுவதாய், அறிஞர்களன்புடன் ஏற்று மகிழ்தற் கிடமின்றி அரு வறுக்கத்தக்க விதமாய் அமைந்து கிடக்கின்றதென் பதைக் காணலாம். இங்ஙனம் சரிதத்திற்கே ஓராதர வின்றிப் பொதுநோக்கற்று விளங்குமிதனை வெளியிட் டுபகரித்த ஆசிரியர் கருத்தின்னதென்பதை நாமறி யோம்.

ஒருவர் ஒரு சரிதத்தை வெளியிடுமுன் அதிற் சம்பந்தப்படும் ஆசிரியர்களின் குணகுணங்களையும், மற்றும் பல விசேடச் செய்திகளையும் நுண்கி யாரா ய்ந்து உண்மைக்குத் தாரமாய்ப் பலரும் புகழ நூல் களை வெளியிடுதல் உத்தமக் கல்வியாளரின் சன் மார்க்க வழியாகும். அங்ஙனமின்றி நினைத்தபடி யெல்லாம் விஷயங்களைத் தாறுமாறாய்ப் புனைந்தும், கர்ண பரம்பரைச் செய்திகளையே போதாரவாகக் கொண்டும், வேண்டுமென்றே தூஷிக்க முற்படுவது நடு நிலைமை குன்றும் பழிகாரர் செயலாமென்று உல கம் வசைகூற முற்படுமன்றோ?

இனி விநோதரச மஞ்சரியிலும், தமிழ் டெக்ஸ்டு களின் உரைப் புத்தகங்களிலும் காணப்படுகிற "புகழேந்திப் புலவர் நளவேண்பாப் பாடியதும் அவ் வேண்பாவிலோர் செய்யுளைக் குறித்துக் கூத்தராக்ஷேபித்ததும்" ஆகிய சம்பவங்களை அவற்றிலுள்ளபடியே வாசகர் உணருமாறு இதன் கீழ்ச் சங்கிரகமாகக் கூறிப் பின் அதிற் காணப்படுகிற சில குற்றங்களை ஒவ்வொன்றாய் விளக்கிக் காட்டுவோமாக :—

"உறையூரிலிருந்து சோழநாட்டை ஆண்டுவந்த குலோத்துங்கச் சோழனுக்குப் பெண் கொள்ளும் பொருட்டு அவனுக்குப் போதகாசிரியரும், சமஸ்தான வித்துவானுமாகிய ஒட்டக்கூத்தர் பாண்டியனிடஞ்சேர்ந்து கலியாணத்தைப்பற்றிச் சம்பாஷியா நிற்கையில், பாண்டியன் "எமது குலத்துப் பெண்ணைச் சோழன் கொள்ளத்தக்க சிறப்புடையவனோ?" எனப் பரிகாசமாகச்சொல்ல அதற்கு ஒட்டக்கூத்தர் 'நம் அரசனினும் சோழன் பலவகையினும் சிறந்தவனே' என அவனது குதிரை நதி மலை, குலம், பராக்கிரமம், கொடி, நகரம், நாடு முதலியவற்றைப் புகழ்ந்து பாட, அதுகேட்டு அருகிலிருந்த புகழேந்திப் புலவர் அவற்றை மறுத்துத் நமது அரசனுடைய மலை, நதி முதலியவற்றைச் சிறப்பித்துப் பாடினவளவில், அது காரணமாக ஒட்டக்கூத்தர் புகழேந்தியிடத்துப் பகை கொண்டார். பிறகு தாம் முடிக்கக்கருதிய விவாகத்தைப் பாண்டியனிடம் பேசி நிச்சயித்துச் சோழனுக்குக் கலியாணத்தை முடித்தார். பாண்டியன் தன் மகளுக்குக் கொடுத்த பல சீதன வரிசையுடன் புகழேந்

திப் புலவரையும் அனுப்ப, முன்னமே பகைகொண்ட ஒட்டக்கூத்தரால் அவர் சிறைப்பட்டு வருந்திப் பல கஷ்டங்கள் அனுபவித்து வருவதைச் சோழனது பட்ட மகிஷியுணர்ந்து, தனது சீதனப்பொருளாக வந்த புலவரை விடுவிக்கக் கருதிச் சோழனிடத்து *ஊடல்கொண்டு பள்ளியறையைத் தாளிட்டிருக்க, அரசன் தன் நாயகி ஊடல்கொண்டா ளென்றெண்ணி ஒட்டக்கூத்தரை யனுப்பிச் சமாதானம் செய்யச் சொல்ல அவரும் அங்ஙனமே சென்று,

† "நானே யினியுன்னை வேண்டுவதில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்திடுவாய் திறவா விடிலோ
வானேறனைய விரவிகு லாதிபன் வாசல்வந்தால்
தானே திறக்குமின் கையிரண்டாகிய தாமரையே."

என்று பாட இராணி "ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்று மற்றொரு தாளையு மிட்டிருக்க, வேந்தன் இவ்வனர்த்தமெல்லாம் புகழேந்தியாரைச் சிறையிட்டமையாலே நேர்ந்தன வென்றறிந்து உடனே புகழேந்திப் புலவரைச் சிறைமீட்டுத்

---

* இராஜ ஸ்திரீகளுக்கு ஊடல் நிகழும்பொழுது அதனை அரசர்கள் புலவர்களைக்கொண்டு தணிப்பிக்க முயலுதலும், அங்ஙனம் சென்று அப் புலவர்கள் சமயோசிதமாகக் கவி பாடியும், இன்சொற்கூறியும் ஊடல் தணித்தலும் மரபு,

† இது தமிழ் நாவலர் சரிதையில் புகழேந்தி பாடியதாகக் காணப்படுகிறது. ஒட்டக்கூத்தர் பாடிய பாடல் வேறு. "வேண்டுவ தென்கொல்" 'கவாடம்' 'கைத்தலமாகிய' எனவும் பாடம்.

தன் காதலியின் கோபந் தணியுமாறு பாடும்படி வேண்ட அவருஞ்சென்று,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த நுண்ணிடையேந்தியபொற், குழையொன் றிரண்டு விழியணங்கே கொண்ட கோபந்தணி, மழையொன் றிரண்டு கைம்மானுபரணனின் வாசல் வந்தாற், பிழையொன்றிரண்டு பொறுப்பரோ குடியிற் பிறந்தவரே."

என்று பாடினவளவில் அவள் மனமகிழ்ந்து கதவு திறந்து காதலன்மேற்கொண்ட கடுஞ்சின மாறினள். அன்று தொட்டுச் சோழன் புகழேந்தியாரை நன்கு மதித்து அன்பு பாராட்டிவந்தனன். இங்ஙன மிருக்குமளவிற் குலோத்துங்க சோழனும், மற்றும் சில பிரபுக்களும் அவர் மகா சாதுரியமுள்ள வித்வசிரோமணியா யிருப்பதினால் அவரைக்கொண்டு வடமொழியிலுள்ள நளசரிதத்தைத் தமிழிற் சுருக்கிப் பாடச்செய்விக்கவேண்டுமென்று கருதிப் புகழேந்திப் புலவருக்கு அறிவிக்கப் புலவரும் அரசன் முதலியோரின் கருத்தின்படி அச்சரிதத்தை 'நளவெண்பா" வென்னும் பேருடன் நானூறு செய்யுட்களாற் பாடிவந்து இராசசபையில் அரங்கேற்றுகையில், "கம்பர்" ஔவையார்" இவர்கள் முன்பே ஒட்டக்கூத்தர்,

"மல்லிகையே வெண்சங்கா வண்டுதே வான்கருப்பு'

என்று பிரசங்கித்த வெண்பாவிற் குற்றங்கண்டு ஆக்ஷேபித்தனர். அதற்குப் புகழேந்தியார் ஒருவாறு சமாதானங்கூற, அதுமுதற் கூத்தரிடத்து விசேட பகைமைகொண்டு, அவரை எவ்விதத்திலும் கொன்றுவிடுவதே தீர்மான மென்று கருதிப் புகழேந்தி சமயம்

பார்த்திருக்கையில், ஒருநாளிராத்திரி யவர் படுக்கை வீட்டில் ஒருவருக்குந் தெரியாமல் ஓர் பெரிய கருங் கல்லைச் சுமந்துகொண்டு வந்தொளித்திருக்கப் பின்ன ரங்கே கூத்தருக்கும் அவர் மனைவிக்கும் போஜன விஷயத்தில் நேர்ந்த சம்பாஷணையால் தாமவரை விரோதமின்றிக் கலந்துகொண்டன ரென்பதாம்.''

இனி இவற்றினின்றும் சில உண்மைவிஷயங்களை ஆராய்வோம்:—

சிறைக் கூடத்தினின்றும் நீங்கிய புகழேந்தியார் அரசர்க்கு ஒட்டக்கூத்தர் பாலுள்ள அன்பும் மதிப் பும் தம்மிடத்தில் இல்லாமைக்கு மிக வருந்தி, அங் கிருக்க மனமின்றி மள்ளுவநாட்டின் கணுள்ள முரணை நகர் சென்று ''சந்திரன் சுவர்க்கி' என்னும் அரசனை அடுத்து அவன் வேண்டுகோளால் நளவெண்பாப் பாடி னுரென்பது நளவெண்பாவிற் பல விடங்களிற் கூறப் படுகிற சில பாடல்களான் தெள்ளிதின் அறியக்கிடக்க குலோத்துங்க சோழனும் சில பிரபுக்களும் பாடும்படி வேண்டிய காரணத்தால் புலவர் கூறியதாகக் கதை கூறுவது யாங்ஙனம்? அன்றியும், கி. பி. 1118 முதல் கி பி. 1132 வரை அரசு புரிந்த விக்கிரமன் காலத்து, நடந்த இவ் வரலாற்றை கி. பி, 900 முதல் 940 வரை அரசாண்ட குலோத்துங்கன் காலத்து நடந்ததாகவுங் கற்பித்திருக்கின்றனர். இதனல் இவ் வரலாற்றின் உண் மை என்னவென்பதை அறிஞர்களே ஆராய்ந்தறிய வேண்டும். தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது ஒட்டக்கூத்தர், கூறியது,

"காத்துஞ் சிரத்துங் களிக்குங் களிறுடைக் கண்டன் வந்தா, லிரத்துங் கபாட மினித்திறப் பாய்பண்டி வனனங் கே, யுாத்துஞ் சிரத்துங் கபாடக் திறக்திட்ட துண்டிலங்கா புாந்துங் கபாட புரத்துங் கல்யாண புரத்தினுமே"

என்று பாடியதை என்ன காரணத்தினாலோ நீக்கிவிட்டுப் புகழேந்திபாடிய "நானேயினி" எனுஞ் செய்யுளைக் கூத்தர்பாடியதாக வமைத்துங் கூறப்பட்டிருக்கிறது. இது யாது பற்றியோ ?

"தாபங் கமழும்பைங் கோதையன் விக்ரம சோழன்மன்னர்
தீபன் புறங்கடை வந்துநின் றானின் றிருப்புருவச்
சாபங் குனிய விழிசிவப் பத்தலை சாய்த்துநின்ற
கோபத் தணியன்ன மேயெளி தோநங் குடிப்பிறப்பே"

(தமிழ் நாவலர் சரிதை)

இழையொன் றிரண்டு வகிர்செய்த வற்றென் றினையு மிடை,குழையொன் றிரண்டுசெட் கொம்பனையாய் கொண்ட கோபக்தவிர், மழையொன் றிரண்டுகைம் மான பரன்கண் டன் வாயில்வக்தாற், பிழையொன் றிரண்டு பொறுப்பதன் றோகடன் பேதையர்க்கே. (தமிழ் நாவலர் சரிதை)

"நானே யினிச்சொல்லி வேண்டுவ தில்லை நளினமலர்த்
தேனே கபாடந் திறந்துவிடாய் செம்பொன் மாரிபொழி
மானே ரபயனிரவி குலோத்துங்கன் வாயில்வந்தாற்
றானே திறக்குநின் கைம்மல ராகிய தாமரையே."

(தமிழ் நாவலர் சரிதை)

என்று புகழேந்தியார் பாடிய மூன்று பாடல்களில் முதற் பாடலை முற்றும் நீக்கியும், மூன்றாவது பாடலை கிரம்பப் பாட பேதமாக்கியும், ஒட்டக்கூத்தர் பாடிய

தாக மாற்றியும் காணப்படுகிறது. இது எந்தக்காரணம் பற்றியோ?

வித்துவான்களாயினுர் ஒருவரையொருவர் வெல்லவேனும் அல்லது கொல்லவேனும் வேண்டில், தங்கள் வித்துவ சாமர்த்தியத்தாலேனும், தெய்வ பலத்தாலேனும், வேறெவ்வித மந்திர தந்திரங்களாலேனும் அவற்றை முடிக்கின், அவர்க்குக் கனமுங் கீர்த்தியுமுண்டாம். இங்ஙனம் பெருங் கள்வரைப்போலப் படுக்கை யறையிற்போ யொளித்துக்கொண்டிருந்து, நித்திரை வேளையிற் றலையிலோர் பெருங்கல்லைப் போட்டுக்கொல்வதினு லுண்டாகுங் கனமுங் கீர்த்தியும் எத்தகையவோ அறிகிலம். இத்தகைய கதையினைக் கற்பனையாக எழுதப் புகுந்தது புகழேந்தியாரது கனத்தைக் குறைக்குமென வறிந்திலர்போலும். இவர்க்கு அப்புலவர் பாலுள்ள் அபிமானம் வெகு நேர்த்தி!

உலகாளும் அரசனேடு சமானமான தானத்திலிருந்து, சகல மந்திராலோசனைகளையுங் கலைக்கியானப் பிரசங்கங்களையும் விளக்கிச் சிவிகை முதலிய பல சின்னங்களோடு வருவதும் போவதுமாயுள்ள ஓர் சம்ஸ்தான வித்வானுடைய கரமானது சுகந்த புஷ்பங்களையுஞ் சிறந்த சாத்திரங்களையும் நவரத்தினக் கற்கள் பதித்த கணையாழி பௌத்திர முதலிய மோதிரங்களையுஞ் சுமப்பதல்லது, பெரும் பாரமானதும் ஒருவன் றலையையுடைத் துயிர்போக்குவதுமான கடுங் கருங்கல்லையுஞ் சுமக்கத் தகுவதோ? அன்றியும், புவிச் சக்கரவர்த்தியைப்போன்று கவிச் சக்கரவர்த்

தியாயுள்ள கூத்தராது அரண்மனைவாயில் தோறும் எத்தனை காவலாளரிருப்பவர்? அதிலவர் படுக்கை யறையினுள்ள அந்தப் புரத்திலே ஸ்திரீ ஜனமன்றிப் புருடர் நுழையக் கூடுவதோ? அல்ல திவரொருவரே தனித்துக் காலம் பார்த்து ஒருவருக்குந் தெரியாதபடி இராப்போதிற் சென்றொளித்தனரெனினும், ஒரு பெருங் கல்லைச் சுமந்துகொண்டு பல காவல்களையுங் கடந்து செல்லத் திருட்டுப் புன்மாக்கட்கும் அசாத்தியமாயின். கல்வியினும், செல்வத்தினும். நாகரிகத்தினும், பிரபுத்துவத்தினும், ஜீவகாருண்யத் தினும், ஈசுரப்பத்தியினும் மற்றுமுண்டான வெல்லா மாட்சிமைகளினும் மிக்காராயுள்ள இப் புலவரேறுக்குச் சாத்தியமாகுமா? இத்தகைய பெருந் தகைமையர் அத்தகைப் புன்றொழிலைச் செய்ய உள்ளத்தினுர் நினைப்பரோ? ஓ அறிஞர்களே! அவ்வாறு நினைத்துளரேல் அவரென்ன கண்டகரா? கயவரா? முசுடரா? மூர்க்கரா? நீசரா? நெறி யிலரா? மற்றெத்தகையரென நினைத்து இத்தகைய கட்டுக் கதையினை அவர் பொருட்டு மிக வபிமானத் தோடுங் கற்பித்து அவரைக்கொலைசெய்யத் துணியும் மாபாவி யாக்கினிர்?

ஒட்டக்கூத்தர் புகழேந்தியின் பாடலிற் கொண் டுள்ள வியப்பைப் புறத்திற் காட்டாவிடினும் அகத் தின்கண் மதிப்புற் றிருந்தனரென்பதும், இவரதை யுணர்ந்து வியந்தனரென்னும் உண்மையும் வேறொன் றுயிருக்க, அதனை ஓர்ந்தறியாது வீணே அபசாரப் பட்டனர்,

இனியேனும் இதுபோன்ற பெரியார் சரிதங்களில் பிழை நேரும்படியான பொய்க் கதையினையும், கற்பனைகளையும் புகுத்தாது நன்னெறிகளி லொழுகி நலம் பெருவாராகவும். இதனைக் கண்ணுறும் அறிஞரும் இத்தகைய ஆபாச வரலாறுகளில் கவனஞ் செலுத்தாமலும் தமது பிள்ளைகட்குப் போதிக்க முற்படாமலும் இருப்பார்களென்றே நம்புகின்றோம்.

யாமிதுகாறும் கூறிப்போந்த சில நியாயங்களால் புகழேந்திப் புலவர் நளவெண்பாப் பாடியதும், அதனைக் கூத்தர் ஆட்சேபித்ததும், ஆகிய உண்மை வரலாறுகள் இன்னவை யென்பது நடு நிலையுடையார்க் கெல்லாம் விளங்காமற் போகாது. எமது அபிப்பிராயமும் விநோதரசமஞ்சரியின் ஆசிரியரையும் மற்றுள்ளோரையும் தூஷிக்கவேண்டு மென்பதல்ல, உண்மை வரலாறுகளை வெளியிடுவதில் கவனமும் கவலையுமன்றிப் பிறிதன்று.

(12)

கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றியதும், கூத்தரைப்பற்றிய சில கற்பனைகளும்.

"கம்பர் இராமாயணம்பாடி அரங்கேற்றியது" என்னும் விஷயமானது சென்னைத் துரைத்தனக் கல்விச்சாலையில் தமிழ்ப் பண்டிதராயிருந்த அஷ்டாவதானம் ஸ்ரீமான் - வீராசாமிச் செட்டியா ரென்பவரால் 1889-ம் வருஷம் பதிப்பித்த "விநோத ரச மஞ்சரி" என்னும் புத்தகத்திலும் சென்னை யூனிவர்சிடி டெக்ஸ்டு கட்கு உரை எழுதிவந்த ஸ்ரீமான் வை. மு.

சடகோபராமாநுஜ ஐயங்கார் மெட்ரிகுலேஷன் தமிழ் உரைப்புத்தகங்களிலும், திருநெல்வேலி தண்டபாணி சுவாமிகளால் பாடப்பட்டு அச்சிட்டுள்ள 'புலவர் புராண'த்திலும் யாழ்ப்பாணம் உதய தாரகைப் பத்திராதிபரால் தொகுக்கப்பட்டுள்ள 'பாவலர் சரித்திரத் பகத்''திலும் காணப்படுகிறது. மேற்கூறிய நான்கு புத்தகங்களிலும் விவரிக்கப்படும் இராமாயணம்பாடியரங்கேற்றிய வரலாறு இரண்டொன்றில் மட்டும் சிறிது வேறுபட்டிருந்தாலும், பெரும்பாலும் தம்முள் ஒத்து வருவதைக் க்ாணலாம். இங்ஙனம் காணப்படும் விஷயங்கள் இராமயண காவியத்தின் கருத்துக்கு முற்றிலும் வேறுபட்டு முன்னுக்குப் பின் முரணாய் அறிஞர்கள் அவாவுடன் வற்று இன்புறுதற்கின்றி அருவை கொள்ளுந் தன்மையில் அமைந்துகிடைக்கிற தென்பதை அதனைச் சற்று ஊன்றி விசாரித்தறிவார்க்குத் தெற்றென விளங்காமற் போகாது. இத்தகைய ஆபாசம் நிறைந்த பொய்க்கதைகளை உண்மையென நம்பி அறிஞர்கள் உயர்தரப்பாடசாலைகளில் மாணாக்கர்கட்கு எங்ஙனம் பாடமாக வைக்கின்றனரோ வென்பதை நாமறியக்கூடவில்லை ஒருக்கால் அவற்றின் உண்மைநிலை இதுவெனக் கண்டறிய அவகாசம் கிடையா தொழிந்த காரணத்தால் அதனைக் கொள்ள நேர்ந்ததோ? அல்லது இவ்வரலாற்றை ஆதியில் வெளியிட முன்தோன்றிய பண்டிதர்கள் செவ்வனே ஆராய்ந்து வெளியிட்டிருக்கக்கூடும் என்ற நம்பிக்கையாலோ? மற்றெக்காரணமோ நாமறியோம். எங்ஙனமாயினுமாகுக. நாம் கம்பர் இராமாயணம் பாடிய வரலாற்றின் உண்மையிதுவெனக் கண்டறியும்

நோக்கங் கொண்டுள்ளதால் அவற்றின் விஷயத்தை மட்டும் ஈண்டாராய்தல் தொடங்குவாம்.

நமது ஆராய்ச்சியை இங்கு ஆரம்பிக்குமுன் விநோத ரசமஞ்சரி, மெட்ரிகுலேஷன் தமிழுரை முதலிய நூற்களிற் காணப்படும் கம்பர் பிரஸ்தாப விஷயத்தை வாசகர் உணரும்பொருட்டு அவற்றிற் கண்டபடி இங்கு சங்கிரகமாகக் கூறி மேற்செல்வது நலமாகக் காண்கிறது. இனி அவற்றிற் கண்டபடி இராமாயணம் பாடிய வரலாறு வருமாறு :—

திருவெண்ணை நல்லூர்ச் "சடையபிள்ளை" யென்பவர் கம்பரை நோக்கி வடமொழிக் கணுள்ள இராமாயணத்தை தமிழில் மொழிபெயர்க்குமாறு பலமுறை கூறியும், அதிலவருக்குறைப்பும், அக்கரையும் பிறவாது, அநேக நாளாய்க் காலதாமதம் செய்துகொண்டு வந்தாரென்றும் அதை அப்பிள்ளை "குலோத்துங்க சோழ" னுக்கறிவிக்க, அவரக்காரியத்தில் இருவரை விடுக்கின் ஒருவருக்கொருவர் துரிதத்தில் முடிக்க வேண்டுமென்னும் எண்ணத்தால் விரைவிலது நிறைவேறுமென்னுங் கருத்தைக்கொண்டு 'ஒட்டக்கூத்த' ரையுங், "கம்பரை"யும் அழைப்பித்து, இருவரையும் அதனைத் தனித்தனி பாடவாக்கியாபித்தனரென்றும், இவருள் ஒட்டக்கூத்தர் அவ்விராமாயணத்திற்குரிய எழு காண்டங்களுள் ஐந்து காண்டங்களைப் பாடிமுடித்து, ஆறுவது காண்டத்தினைத் தொடங்கிக் "கடல் காண் படலம்" பாடும்வரையிற் கம்பர் காப்புச் செய்யுளும் பாடாதிருந்தனரென்றும், இப்படி யவரிருப்பதையுணர்ந்த சடையபிள்ளை அரசனுக்குணர்

த்த, அரசனவரை யழைப்பித்துக் கேட்டபோது, கடல்காண் படலத்துக்கப்பால் ' சேதுபந்தனப்படலம்'' வரையிற் பாடியிருக்கின்றேனெனப் பொய்பேசி அப் படலத்தைமாத்திரம் எழுபது செய்யுட்களாற் பாடி முடித்துக் கொண்டுவந்து பிரசங்கித்தன ரென் றும், அவற்றுளோர் செய்யுளில் '' தூமி '' என் னும் பதத்தைக் குறித்துக் கூத்தர் ஆக்ஷேபிக்க, அதற்குக் கம்பர் கலைமகளைத் தியானிக்க, அவரவர் பொருட்டு இடையர் சேரியில் இடைச்சியாக வந்து மோர் கடைய, அங்குஅரசனையும் கூத்தரையும் அழை த்துப்போய்த் ''தூமி'' என்னும் பதத்தைப் பற்றி யுண் டான ஆக்ஷேபனையை யொழித்தனரென்றும், அதன் பின்னைறக்குறைய ஆறுமாதத்தில் கூத்தர் மற்றிரண்டு காண்டங்களையும் பாடி முடித்துக் கலைவாணி யருள் பெற்ற கம்பர் கவிக்குமுன் நமது கவிமகிமைப் பட வில்லை யென்று வெறுப்புண்டாகித் தாம் பாடிய அக் காவியத்தைச் சஞ்சிகை சஞ்சிகையாக வுருவிக் கிழித்துக்கொண் டிருந்தனரென்றும், அக்காலங்கு தற்செயலாகச் செல்லலுற்ற கம்பரதைக்கண்டு ' ஏன் வருந்திப் பாடியதைக் கிழித்தெறிகின்றீர்? எனக்கேட்ட தற்கு வரகவியே கவி மற்றைக் 'கவி என்ன கவி ''? என்று கூறிக் குறையுங் கிழித்தற் கெத்தனிக்க, அப் போதவர் கையிலிருந்த வட்டை யவர் வாங்கிப் பார் த்து ''உத்தரகாண்ட'' மாயிருக்கக் கண்டு, நாம் ஆறு காண்டமாத்திரம் பாடி ஏழாவதற்கு இதனை வைத் துக்கொண்டால் வருத்தமின்றிப் போகுமென்னும் கருத்தையுன்னி, அதனைமாத்திரம் தருமாறு கேட் டனரென்றும், அவரப்படியே செய்யுமென்று தா

ஓர் நல்லநாட்கொண்டு இராமாயணம் பாடத் தொடங்கிப் பதினைந்து பகலில் நித மெழுநூறுகப் பதினுயிரம் பாடலில் முடித்து, அதனை அரங்கேற்றுதற்குத் தகுந்த விடம் "திருவரங்கமே" தக்க தெனக்கொண்டு, அங்கு செல்லத் திருவரங்கத்து அந்தணர் சிலர், தில்லை மூவாயிரவர் இடத்துச் சாற்றுக்கவி வாங்கிவந்தால் இங்கு அரங்கேற்றல் ஆகுமென்று கூற, கம்பர் திருவரங்கத்து அந்தணர் உத்தரவின் படியே தான் பாடிய அக் காவியத்திற்குக் கையொப்பம் வாங்குமாறு அம் மூவாயிரவரும் ஒருங்குசேரும் தருணம் நோக்கியிருந்தன ரென்றும், அது விரைவின் கிட்டாததால் அவர் வருந்தித் துயிலுறுங்கால், அவரது சொப்பனத்தில் தில்லை கோவிந்தராஜர் எழுந்தருளி, அவர்கள் ஒருங்குசேரும் சமயம் தெரிவித்தன ரெனவும், அஃதுணர்ந்தவர் செல்லுங்கால் மூவாயிரவரும் விடநாகந் தீண்டி இறந்த தம்மகவுக்காக ஒன்று கூடியிருந்தார்கள் எனவும், அதுகண்ட கம்பர் தனதுவரவின் காரணத்தையவர்கட்குத் தெரிவித்துப் பின்னர் தானவர் வேண்டுகோளால் இறந்துள்ள மகவை,

"ஆளியான் பள்ளி யணையே யவன் கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—பூழியான்
பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற
நாணே யகல நட" (தமிழ் நாவலர்சரிதை)

"மங்கை யொருபாகர் மார்பிலணி யாரமே
பொங்கு கடல்கடைந்த பொற்கயிறே—திங்களையுஞ்

சிறியதன் மேலூருந் தெய்வத் திருநானே
யேறிய பண்பே யிறங்கு"* (தமிழ் நாவலர்சரிதை)
"பாரைச் சுமந்த படவரவே பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கும் மெல்லணையே—யீரமதிச்
செஞ்சடையான் பூணுந்திருவா பரணமே
நஞ்சுடையாய் ஊர நட" (3)

என இம்மூன்று வெண்பாக்கள் பாடி உயிர்ப்பித்தா ரென்வும், அதனால் "தில்லை மூவாயிரவர்' கம்பரை யுள்ளபடி தம்மினுஞ் சிறந்த மகாத்துமாவென மதித் துப் பயந்து, உடனே யவரை உபசரித்துத் தலையில் நெருப்பு விழப்பட்டவர்களைப் போலப் பரபரப்பாக வந்து அவரிடத்திருந்த காவியத்தை வாங்கிப் பார்வை யிட்டு, இவருக் கொப்பான வித்வானும், இவ்விராமா யணத்திற் கொப்பான காவியமும் உண்டோவென ஸ்ரீ சிவபெருமானையும், அவர் செய்தருளிய சிவாகமங் களையுமே யன்றி ஏனைய தேவர்களையும், ஆகமங்களை யுஞ் சொப்பனத்திலும் சிறிதும் மதியாதவர்களான தாமனைவரும், மிக வியந்து மதித்துத் தங்களுக்குள் ளே பிரம்மானந்தம் அடைந்தவர்களாயினும், "குண த்தை மாற்றக் குருவில்லை" என்பதற்கேற்பத் தங் கள் குணம்போகாமல் ஏதேதோசில அவரைக்கேட்க அதற்கெல்லாம் அவர் தக்கவிடையளித்தபின் சரி யென் றொப்புக்கொண்டு கையொப்பஞ் செய்தனரெ னவும், பின் கம்பர் இராமாயணத்தை அரங்கேற்றத் தொடங்கி முடித்து அரசனுதியோரால் தக்கபடி புக ழ்ந்து சன்மானிக்கப் பட்டனரென்பதுமே.

---

* 'மங்கை யொரு பங்கன் மணிமார்பிலாரமே' எனவும் 'யேறியவாறே யிறங்கு" எனவும் பாடம் "தமிழ்நாவலர் சரிதையில்" முதல் இரண்டு பாடல்களே காணப்படுகிறது.

இனி, இவற்றின் உண்மைச் சம்பவம் என்னை யென்பதைச் சிறிது ஆராய்வோம்:—

மகா கவியாகிய கம்பரைத் திருவெண்ணை நல்லூர்ச் சடையபிள்ளையாவது சோழராசனாவது இராமாயண காவியத்தைப் பாடும்படி கூறியதற்கு மேற்கோளாக விநோதரசமஞ்சரி முதலிய நூற்களில் ஓராதாரமேனுங் காணப்படவில்லை. அருட் கவியாகிய கம்பர் தமக்குள் முதிர்ந்த ஸ்ரீராம பக்தியின் காரண விசேஷத்தால் ஒருவருஞ் சொல்லாமல் தாமே பாடத் தொடங்கியதாக அவருடைய இதிகாசமாகிய இராமாயண காவியத்தில் சில ஆதாரங்கள் இருக்கின்றன. இங்ஙனமிருக்கச் சோழனும், சடையபிள்ளையும் இராமாயணம் பாடச்சொன்னதாகக் கதை கூறுவது யாங்ஙனம்?

அன்றியும், இராமாயணச் செய்யுட்கள் ஒவ்வொன்றும் சுவை நிரம்பியதாய் அர்த்தபுஷ்டி யுடையதாய்க் கற்பனை நிறைந்ததாய், ஓசையின்பம் பயப்பதாய், விழுமிய பொருள் தருவதாய்ப் படிப்பதற்கு இனிமை யுண்டாக்குவதாய் விளங்குகின்றனவே. அவைகளைப் பாடலாக நாளொன்றுக்கு எழுநூறு விழுக்காடு பாடி முடித்தனர் என அத்தனை லேசாகக் கூறுவது சுத்த அசம்பா விதமேயாம். இது "பிள்ளை பெற்றலின் அருமை யறியாத மலடியின் கூற்றை யொக்கும்." இராமாயண காவியத்தில் ஊடாடிப் பழகிய நல்லறிஞர்கள் ஒருக்காலும் இவ்வழியில் பிரவேசிக்க முயலார்கள் என்பது திண்ணம். இராமாயணத்தின் பாயிரத்தாலேயே கம்பர், ஒருவர் வேண்டப்படா

மலே தாமே பாடத் தொடங்கியதாக வெள்ளிடை மலேபோல் விளங்கிக்கிடக்க, அதனை ஓர்ந்து அறியாது விளக்கைப் பிடித்துக் கிணற்றில் வீழ்வார்போல் வீழ்ந்து அபசாரப்பட்டனர். இதனையெல்லாங் கூர்ந்து யோசிக்குமளவில் வேணுமென்றே ஒருவர் கம்பரைத் தூஷிக்கத் தலைப்பட்டதாகக் கருதவேண்டியதாகின்றது. இனியேனும் அத்தகையார் இதுபோன்ற பாரகாவியங்களில் "கலப்பாலில் துளி விஷங் கலந்தது போல்" பொய்க் கதைகளையும் கற்பனைகளையும் புகுத்தாது நன்னெறிகளில் ஒழுகி நலம் பெறுவாராகவும். இதனைக் கண்ணுறும் அறிஞர்களும். இனி இத்தகைய நலத்தையே நாடுவாராக. இனி இராமாயணம் பக்தி விசேடத்தால் அன்றி ஒன்றிருவர் வேண்டுகோளால் பாடப்பட்டதல்ல வென்பதற்குப் பிரமாணம் வருமாறு :—

அரும்பெறன்மணியும் பெரும்பயாமிழ்துமே நிறையப்பெற்ற பாற்கடல்போலப் பரந்து விளங்குகின்ற இராமாயணம் என்னுந் தெய்வ வான்பனுவலேக் கம்பர் பாடியதற்குக் காரணம் இவரது ஸ்ரீராம பக்தியேயன்றி வேறில்லை யென்பது இவர்,

"ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிவ்
வேசில் கொற்றத் திராமன் கதையரோ."

(இராமாயணம்.)

எனவும்

"ஆங்கவன் புகழ்ந்த நாட்டை
யன்பெனு நறவ மாந்தி

மூங்கையான் பேச லுற்று
னென்னயான் மொழிய லுற்றேன்.''

(இராமாயணம்.)

எனவும், இராமாவதாரத்து உரைத்துப் புகுந்தவாற்றால் நன்கறியத்தக்கது. இவர்,

" முத்தமிழ்த் துறையின் முறைபோகிய
உத்தமக் கவிகட் கொன்று ணர்த்துவேன்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ.''

(இராமாயணம்.)

என்றதும் இக்கருத்தையே வலியுறுத்தும். இவர் வளர்ந்து சிறத்தற்குக் காரணமான சடையவள்ளல் குடிக்கும் இந்த ஸ்ரீராம பக்தி உண்டென்பது அவ்வள்ளற்குச் "சரராமன்" எனப் பெயரிட்டு வழங்கியவாற்றால் ஊகிக்கப்படும். அக்குடிப்பரிசயம் இவரது பக்திக்கு ஓர் காரணம் ஆயினுமாம். அன்றியும், வான்மீக முனிவர் திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீராமாயணத்தின் திட்பநுட்ப ஒட்பங்களே இவர் காலத்து யாண்டும் பரந்து விளங்கி மேப்பட்டன என்பதும், அக்காலத்து அறிஞர் எல்லாம் ஸ்ரீராம கதையை அமிழ்தினும் அதிகமாக மதித்து வந்தனர் என்பதும்,

" வையமென்னை யிகழவு மாசெனக்
கெய்தவும் மிதியம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி னோர்புகழ்
தெய்வ மாக்கத்தை மாட்சி தெரிக்கவே''.

(இராமாயணம்)

"நொய்தி னெய்ய சொன்னூக்க லுற்றேனெனை
வைத வைவின் மராமர மேழ்துளை
யெய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே."

(இராமாயணம்.)

"வாங்கரும் பாத நான்கும்
வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத்
தேவரும் பருகச் செய்தான்".

(இராமாயணம்.)

*எரிகட லுலகத் தன்னு ளின்றமிழ்ப்புலவர்க் கெல்லா
முறுவலுக் குரியதாக மொழிந்தனன் மொழிந்தவென்சொற்
சிறுமையுஞ் சிலையிராமன் கதைவழிச் செறித றன்னா
லறிவுடை மாந்தர்க்கெல்லா மமிழ்மொத் திருக்குமன்றே."

(இராமாயணம்.)

என இவர் இராமாயணத்துள் வழங்கியவாற்றால் உய்த்துணரப்படும். இவ்வாறு அறிஞர் எல்லாம் ஒருங்கு பாராட்டும் ஸ்ரீராம கதையின் தெய்வமாட்சி, இப் பெரும் புலவரது அறிவுடைய நெஞ்சினையும் நன்கு கவர்ந்ததாதலின், அதனையே தமது "செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூறிய தீஞ்சொல் வவ்விய" தமிழ்ப் பாக்களால் பாடிப்புகழ் நிறுத்துதற்கு ஆசைப்பட்டனர் எனினும் அமையும்.

இவர் இராமாயணத்தைப் பெரும்பான்மை வெண்ணெ நல்லூரிலும், சிறுபான்மை ஒற்றியூரிலும் இருந்து பாடினர் எனவும், ஒற்றியூரில் இருந்தபோது

* இச்செய்யுள் பழைய ஏடுகளில் உள்ளது.

இந்நூலை இரவிலே பாடினர் எனவும், அக்காலத்து மாணாக்கர் பலர் பிந்தாமல் எழுதுவதற்கு அவ்வூர்க் காளியைத் தீப்பந்தம் பிடிக்கப் பாடினர் எனவும்,

"தொடைசிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர் வயிற்றந்தே"

(இராமாயணம்.)

"ஒற்றியூர் காக்க வுரைகின்ற காளியே
வெற்றியூர்க் காகுத்தன் மெய்ச்சரிதை—பற்றியே
நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணாக்கர்
பிந்தாமற் பந்தம் பிடி".

(தமிழ் நாவலர் சரிதை)

என வருவனவற்றால் அறியப்படுகின்றன.

மேலும், கம்பர் அரவந்தீண்டி யிறந்த தில்லை மூவாயிரவர் மகவை உயிர்ப்பிக்கப் பாடிய மூன்று வெண்பாக்களும் கம்பர் "ஏரெழுபது" என்னும் நூலை அரங்கேற்றுகையில் திருவெண்ணெய்ச் சடையவள்ளல் உடனிருந்து கேட்ட புதுவைச் "சேதிராயன்" என்னும் ஓர் உபகாரியை விடந்தீண்ட, அவர்பொருட்டுப் பாடியதாகக் கம்பர் தாம் பாடிய "திருக்கை வழக்க"க் கலியடிகளில் ஒன்றில்,

"மேரெழுப தோதியரங் கேற்றுங் களரியிலே
காரிவிட நாகங் கடிக்குங்கை".

எனவும், இதனுக்கு எடுத்துக் காட்டியாகத் தொண்டை மண்டல சதகத்தில்,

"அழுவதுங் கொண்டு புலம்பாது நஞ்சண்டதுமறைத்தே, ரெழுபதுங் கொண்டுபுகழ் கம்பவாண னெழுப்ப

விசை, முழுவதும் கொண்டொரு சொற்பேச செய்யின் முழுகிக் கையின், மழுவதுங் கொண்டு புகழ்கொண்ட தாற் ருெண்டை மண்டலமே''.

என வருவனவற்ருல் கம்பர் எதன்பொருட்டு அம் மூன்று பாடல்களும் பாடியிருப்பார் என்பதை அறிவின் மிக்கார் ஊகித்தறிதல் வேண்டும். தில்லை மூவாயிரவர் விஷயமாக இவர் பாடியதற்குத் தக்க சான் றின்மையாலும் ஏரெழுபது விஷயமாசப் பாடியதற்குத் தக்க சான்றுளதாலும், இவை சுத்த அபத்தம் என்பது உணரப்படும்.

மேலே விவகரிக்கப்பட்டனவற்ருல் கம்பர், இராமாயணம் பக்தி காரணமாகப் பாடினுர் என்பது அறியப்படுகின்றதன்றி மற்ருெருவர் வேண்டுகோளால் பாடப்பட்டதல்லவென்பதறியப்படும். அங்ஙனம் ஒருவர் வேண்டுகோளால் பாடப்பட்டதெனின் '' வில்லிப்புத்தூரர் '' பாரதத்தில் அவர் குமாரர் ' வரந்தருவார் '' பாடிய பாயிரத்தில் · வக்கபானக கோங்கர்குல வரபதி 'யாட்சோண்டான்'' என்னும் பிரபுவின் வேண்டுகோளின்படி வில்லிப்புத்தூரார் டாரத விருத்தம் பாடினுர் என்பதை,

பிறக்துய்யக் கொண்டவனிப் பேருலகம் பெருவாழ்வு கூறும் நாளில், நிறைந்தபுகழ்ச் சனிகர்வாழ் வில்லிப்புத்தூரனை நோக்கி நீயும்நானும், பிறந்ததிசைக் கிசைநிறப்பப் பாரதமாம் பெருங்கதையைப் பெரியோர் தங்கள், சிறந்த செவிக் கமுதமெனத் தமிழ்மொழின் விருத்தத்தாற் செய் கவென்ருன்.

எனக்கூறியதுபோல் இவரும் இராமாயண காவியத்தில் எங்கேனும் ஓரிடத்தில் குறித்திருக்கவேண்டுமே? எனில்லை. இதனாலேயே விநோதரசமஞ்சரியில் கூறப்படுகிற இராமாயணம்பாடி அரங்கேற்றிய வரலாறு சுத்த அபத்தமென்பதை அறிந்துகொள்க. அல்லாமலும், "விநோத ரசமஞ்சரி" முதலிய நூல்களிற் கூறப்படுகிற கம்பர் இராமாயணம் பாடிய வரலாறு மேலே விவகரிக்கப்பட்டதல்லாமல் பின்னும் ஆழ்ந்து விசாரிக்கப் புகின் கம்பர்மீது பல ஆட்சேபங்களும், அநேக பழிபாவங்களும் ஏற்படுகின்றன. நிரபராதியான இம்மகா கவியின்மீது எக்காரணத்தாலோ இவர்கள் இங்ஙனம் பழி கற்பிக்கத் தொடங்கியது? குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொண்ட கதையொப்ப கம்பர்பால் பெருமை கற்பிக்கத் தொடங்கியவர் இழிவையே தேடிவைத்தனரென்னலாம். ஆராயாது செய்கருமங்களெல்லாம் முடிவில் இழுக்கையே தருமன்றோ? இதுபற்றி யன்றே,

எண்ணித் துணிகருமம் துணிந்தபி
னெண்ணுவ தென்ப திழுக்கு.

(திருக்குறள்)

எனப் பெரியாரும் பணித்தனர்.

மகாத்மாக்களுடைய சரித்திரங்களை உலகத்திற்கு வெளிப்படுத்தத் தோன்றிய மேதாவியர் செவ்வனே பரிசீலனை செய்து வெளியிடுவதன்றோ புகழ்தற்குரியதாம். அங்ஙன மின்றி உண்மைக்கு விரோதமாய் ஒழுங்கீனமாகவிருந்தால் வெளிப்படுத்

தியவர்க்குச் சரித்திர ஞானமில்லையென்றல்லவோ நினைக்கவேண்டியதாகின்றது. நிற்க.

கம்பர் விஷயமாகப் பழிகற்பிக்கத் தொடங்கியது எங்ஙனமெனின், கூறுவோம்.

கம்பரானவர் தனக்குத் தந்தையொப்ப அன்னமாதிகளைத் தந்து ஆதரித்துக் கல்விக் கற்பித்து மணவியாதிகளை முடித்து ஆபத்துக்கெல்லாம் அருந்துணையாக விருந்துகாத்த சடைய பிள்ளையின் விருப்பத்தைச் சட்டைசெய்யாதவரா யிருந்தபோதே,

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்னு மிலக்கணத்திற்கு இலக்காயினர். இஃதிங்ஙனமாக, அச்சடையபிள்ளை சோழராசன் முன்னிலையிற் சொல்லுவித்தும். அதனையுங் கடந்தவராய்ப் பின்னிருவரும் நேரிலழைத்துக் கேட்டபோது,

தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச்சுடும்.

என்பதைத் தானறிதிருந்தும் பேசிய பொய்

பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்,

என்றபடி யார்க்கென்னதீங்கை யொழித்து நன்மையைத்தந்தது? அப்பொய்யால் பிறருக்கொரு நலமில்லாதபோதே தனது சுயநலத்தைக் கருதிக்கூறிய பொய்யாகித் தன்னையே சுடுமென்பதற் கையமென்னை? இதனாலன்றோ தேவர்,

"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லாமுளன்"

என மீண்டும் வற்புறுத்திக் கூறினர். இத்தகைய செய்யக்நன்றி மறக்கும் பொய்யருக்குக் கலைவாணியின் கடாக்ஷமிருப்பதென்ப தியாங்ஙனம்?

அன்றியும், அரசன் அக்காவியத்தை விரைவிற் பாடி முடிக்கக் கம்பரையும் ஒட்டக்கூத்தரையு நியமித்தானாயின், அதனைப் பப்பாதியாகப் பகிர்ந்து தந்து "கந்தபுராணச் சப்தகாண்டங்களையுங் கச்சியப்ப சிவாசாரியருங் கோனேரியப்ப நாவலரும், காஞ்சிப் புராண வுபயகாண்டங்களையுஞ் சிவஞான சுவாமிகளுங் கச்சியப்ப முனிவரும், பகிர்ந்துகொண்டு பாடியதுபோலப் பாடச் செய்தல் விதி. அவ்வாறின்றித் தனித்தனிப் பாடச்செய்தா னென்பதற்குக் காரணம் யாது?

கம்பர் தாம் பேசிய பொய்க்கிணங்கப் பாடிவந்த சேதுபந்தனப் படலத்தி னோர்பாட்டில் (துளி) என்னும் பதத்திற்கு ஆகுபெயராய்த் (துமி) எனப் பிரயோகித்திருப்பதில் கூத்தர் ஐயங்கொண்டா க்ஷேபித்தனரென்றால், இத்தகைய பிரயோகங்கள் பல விலக்கிய நூல்களில் எதுகையின்கண்ணும், மோனையின் கண்ணும், மின்னும்பல சீரின்கண்ணு மெத்தனையோ கண்டுந் தாமே கையாடியு மிருக்குமிவருக்கு அதிற் சந்தேகம் வந்தது மிக வாச்சரியமே. அன்றியு மித்தகைய விகர்ப்பங்கள் தானேதியுள்ள சிந்தாமணி முதலிய காவியங்களிலேயே செப்பரிதாயுள்ளன. இவைகட்கு விதியோ வெல்லாவிலக்கண நூல்களினு

மென்ணிலவாயுள. இத்தகையோ ரற்பகார்யார்த்த மாய்க் கலைமகளா ரோரிடைச்சியாக யிடையர் சேரியின்கணெழுந்தருளி அச்சந்தேகத்தினைத் தீர்த்தது அதினினு மிகவாச்சரியமே. இத்தமிழ் நாட்டின்கணுள்ள விலக்கிய நூல்களில் இத்தகைய பிரயோகங்களுக்கெல்லாங் கலைமகளார் வந்துதான் கண்டிறக்க வேண்டும்போலும்.

கம்பரைத் தேவவருளாற்பாடும் வரகவியெனக் கருதியஞ்சிக் கூத்தர் தாம்பாடிய விராமாயணத்தைக் கிழித்தெறிந்தனரென்றால் இப்புவியிலிதுகாறுமெத்தனையோ வரகவிகளிருந்து பாடிய பாக்களைக்கண்டு பயந்து எத்தனைபே ரெத்தனை பிரபந்தங்களைக் கிழித்தெறிந்தார்கள் ? இடையில் வெறிபிடிக்கப்பட்ட வித்துவான்களுங்கூடத் தாங்கள் பாடிய பாக்களைக் கிழித்தெறிய மனங்கொள்ளார்களே, அப்படி யவருண்மையாகக் கடல்காண்படலம் வரையிற் பாடியிருந்து கம்பரதற்குமேல் சேதுபந்தனப்படலம் வரையிற் பாடியுள்ளேனெனப் பொய் சொல்லிப் பின்னர் பாடிவந்த வப்படலத்தில் தாம் (துமி) யென்பதற்குப் பொருள் தெரியாது மயங்கி அது முன்னிலையிற் கம்பர் கலைவாணியி னருள்பெற்ற வரகவியெனத் தெரிந்து கொண்டாரேல் அப்போதேயன்றோ தாம் பாடிய வரையிற் கிழித்தெரிதல்வேண்டும். அப்பா லாறுமாதம்வரையிற் கஷ்டப்பட்டு முன்பாடிய வைந்து காண்டச் செய்யுள்களைக் கொள்ளற் பாலனவாகிய மற்றை யிரண்டு காண்டங்களையும் ஏனவர் வீணே பாடல்வேண்டும் ?

கம்பரது கவிக்கு வெதிரே நமது கவி கவின் செய்யமாட்டாதெனக் கிழித்தெறியத் தலைப்பட்ட கூத்தர் "நானூறுகாண்டமேபாடி யேழாவதற்கிதனை வைத்துக்கொள்ளுகிறேன்" என அவ்வுத்தர காண்டத்தைக் கம்பர் கேட்டபோது அப்படியே செய்யுமென்று கூறிக்கொடுத்தாரெனில், தமது கவி அவர் கவிக்குமுன் தாழ்ந்துபோமென்றுள்ளினவர் எப்படியதிலொரு கவியேனுங் கொடுப்பர்? உடனே கிழித்தெறிந்தனவற்றையும் பொறுக்கிச்சேர்த்து அவர்கண் முன்னர் தானே நெருப்பிலிட்டுத் தீய்த்திடுவான்றோ? அந்தோ! இவைகளை யெல்லாம் அறிவின்மிக்கார் யோசிக்குமிடத்து நம்பத்தக்கனவாமா?

## (13)

### ஒட்டக்கூத்தரும் அவர் வாழ்ந்த காலமும்.

புகழேந்தி யொட்கூத்தர் பாடல்கள் சிலவற்றில் 'குலோத்துங்கன்' எனப்படுஞ் சோழவரசன் பெயர்வழங்கி வருவதால் இவர் காலம் குலோத்துங்க சோழன் காலமாகுமெனக் கருதப்படுமிடத்துச் சோழமன்னருட் பலர் 'குலோத்துங்கன்' என்னும் பெயருடையவராக விருப்பதால் எக் குலோத்துங்கன் காலத்தவர் என ஆராய வேண்டுவது அவசியமாகும். அவருள் ஒருவன், விசயாலயன் பேரனும், ஆதித்த சோழன் மகனுமாகிப், பரகேசரிவன்மன், சங்கிராம ராகவன் பராந்தகன், வீரநாராயணன் எனப் பல பெயர்களாற் சிறந்து விளங்கிய 'குலோத்துங்கன்' என்பான் மற்றொருவன், கோப்பரகேசரிவன்மன், இராசேந்திரசோழன் எனப் பெயர் சிறந்த கங்கைகொண்ட சோழன் மகள் மகனும், சளுக்குவேந்தனாகிய 'விண்டு வருத்தனன்

மகனும் ஆகி, உபய குலோத்தமன் என விளங்கிய அபனாகிய குலோத்துங்கன் ஆவன். வேறொருவன், மேற் கூறிய உபய குலோத்தமனாகிய அபயன் பேரனும் விக்கிரமசோழன் மகனும் ஆகிய குமாரகுலோத்துங்கன் ஆவன். இன்னும் ஒருவன் இச்சோழன் வழியிற் சங்கமன் எனப்பெயரிய சோழற்கு மகனாய்ச் சங்கரசோழனுடன் பிறந்த குமாரமகீதரனெனப் பெயருள குமாரகுலோத்துங்கன் ஆவன்.

புகழேந்தி யொட்டக்கூத்தர் ஆங்காங்கு பாடிய பாடல்கள் பலவற்றுள் குலோத்துங்கன் என்னும் பெயரேயல்லாமல் விக்கிரமசோழன் அபயன் உத்துங்கன், சயதுங்கன், கண்டன், மானாபரணன், அகளங்கன், என்பன முதலாகச் சோழன் சிறப்புப் பெயரும் பொதுப்பெயரும் பலவாகப் பயின்றுள்ளன. மேலெடுத் தோப்பட்ட பெயர்களைத் தமிழ் நாவலர் சரிதைச் செய்யுட்களாலும், விக்கிரமசோழன் உலா வடிகளாலும் உணர்க. இப் பலபெயர்களுள் குலோத்துங்கன் என்பது முதலாவதாக ஆதித்தன் மகனாகிய வீரநாராயணச் சோழனுக்கு வழக்கி, அவற்றுக்குப் பின்பு நெடுங்காலங்கழித்து அயன்முதலாகப் பலர்க்கும் வழங்கிய தாகலின், அது பொதுப்பெயர்போல்வது, அபயன் என்பது ஆதியில் உயகுலோத்தமனுக்கு வழங்கிஅவன் வழித்தோன்றிய விக்கிரமன் முதலாகப் பலர்க்கும் வழங்கியதாகலின் அதுவும் பொதுப்பெயர் போல்வது. கண்டன், மானாபரணன், அகளங்கன் என்பன சோழர்பலர்க்கும் வழங்கும் பொதுப்பெயர்களாம். உத்துங்கன், துங்கன், சயதுங்கன், என்

பனவும் குலோத்துங்கனினின்று எடுத்து வழங்கிய பெயர்களாய்ப் பலர்க்கும் வழங்குவனவேயாம். இவ் வழக்கங்களை இச்சோழர் பாடல்களில ஆங்காங்கு கண்டுகொள்க.

இனி, இப்புலவர்கள் பாடலுட் குறித்த விக்கிரம சோழன் என்னும் பெயரொன்றே மேலெடுத்துக்காட்டிய பலர்க்குச் சிறந்தபெயர், பொதுப்பெயர் போலாது ஒருகாலத்து ஒருவற்கே தனியே வழங்கிய இயற்கைப் பெயராய் அறியப்படுத்தலாலும் அவ்விக்கிரமசோழன் பெயரால் பல பழைய சாஸனங்கள் இருப்பதாலும், விக்கிரம சோழனென்னும் இயற்பெயரால் சிறந்தானொருவன் சோழர் பரம்பரையிற்றோன்றி யரசாண்டான் என்பது நன்கறியத்தக்கதாகும். இவ்விக்கிரம சோழன் என்னும் பெயர் குலோத்துங்கனென்னும் பெயர்போலச் சோழர் பரம்பரையினராய்ப் பலகாலத்தவராகிய பலர்க்கு வழங்கப்படாமையும், தனியே ஒரு காலத்தொருவற்கே வழங்கப்படுதலும் பழைய சாதனங்களாலும் நூல்களாலும் அறியப்படுகின்றது. இங்ஙனம் ஒருவற்கே உரியபெயரும், பலர்க்குரியதோர் பெயரும் ஒருவர் பாடலுள் வழங்கிய விடத்து அப் பலர்க்குரிய பெயர்பற்றி அவருடைய காலத்தை ஆராயாது விடுத்து அவ்வொருவற்குரிய பெயர்பற்றிக் காலவரையறை செய்யப்புகுலே கிரமமன்றிக் குற்றமாகாது. ஆதலால், இவர்கள் பாடலுட் குறித்த விக்கிரமசோழன், என்னும் பெயர்பற்றியே இவர் காலங்காணத்தகும். இவ்வாறு புகாமல் குலோத்துங்கன் என்னும் பெயர்பற்றிப்புகின் பெரிதும் இடர்ப்

படும் ; என்னை ? குலோத்துங்கன் என்னும் பெயரொன்றேகொண்டு ஆதித்தன் மகனாகிய வீரநாராயணனென்னும் குலோத்துங்கன் காலம் இப்புலவர்காலமாம் எனக் கூறுமிடத்து, புகழேந்தி யொட்டக்கூத்தர் விக்கிரமனைப்பாடினார் என்பது மேல் நன்கு தெளியப்படுதலாலும், வீரநாராயண குலோத்துங்கன் கி.பி. 900-முதல் 940-வரை அரசாண்டவன் எனவும், விக்கிரமசோழன் கி. பி. 1118-முதல், கி. பி. 1132-வரை அரசான்டவன் எனவும், தெரிதலாலும், இவர்மேற்கூறிய வீரநாராயண குலோத்துங்கன் காலமுதல் விக்கிரமன் காலம்வரை இருந்தாராவரெனப்பட்டுச் சிறிதேறக்குறைய இருநூற்றாண்டு உயிர்வாழ்ந்தனர் எனப்படும். ஆதலால், விக்கிரமசோழன் றந்தையாகிய அபய குலோத்துங்கன்; காலமே இப்புலவர்காலமாம், அக்காலத்தவர் விக்கிரமனைப் பாடுதற்கும் இயலுமோவெனில், கூறுவோம்:—

"சங்கரசோழனுலா" என்னும் அரிய பழைய இனிய தமிழ்நூலின் ஆரம்பத்தில் சங்கரசோழனுக்முற்பட்ட சோழராச பாரம்பரியம் எடுத்தோதியவிடத்து,

* * * கூடலா

கும்ப ரணிகொள்ளக் கொள்வித் தொருகலிங்க
வெம்பரணி கொண்ட விறலோனுஞ்—செம்பதத்துக்
கூடிய 'சீர்தந்த' வென்றெடுத்த கூத்தனுலாச்
சூடிய விக்கிரம சோழனும்—பாடிய
வெள்ளைக் கலியுலா மாலையொடு மீண்டுமவன்
பிள்ளைத் தமிழ்மாலை பெற்றோனுந்—தெள்ளித்தம்

முன்னு யகரினவன் மூதுலாக கண்ணிதொறும்
பொன்னு யிரஞ்சொரிந்த பூபதியும்—மென்னுமிவர்
மாசக்ர மேரு வலஞ்சென் மகாசல
பூசக்ர மேழும் புரந்த தற்பின்.

* * * *

சங்கமன் றெல்லைந் தவம்போல.........

* * * *

வல்லம ளுதிமனுவினு மேதக்க
நல்லம னென்கின்ற நாயகற்கும்.........

* * * *

பைத்த பொருபுலியைப் பல்கோடி வேந்தணிய
வைத்த குமாரமகீதாற்கும்—மெய்த்துணையாய்த்
தோன்றிய சங்கா ராசன் சுராசன்."

எனவும், அந்நூலிறுதியில் :—

"பருவத் தெழுவகைமைப் பாவையரெல் லாருந்
தெருவத் தினைய தினைப்ப—பரணிக்
கவியாற் சயங்கொண்டான் கட்டுரைப்பக் கொண்டான்
குவியாக் கரத்தாசு கொண்டான்—கவிகை
நிலாக்கொண்டான் கூத்தனிகழ்த்த வொருமூன்
றுலாக்கொண்டான் போந்தா னுலா."

எனவும் வருவனவற்றுட் பரணிகொண்ட விறலோன் பின்னை, கூத்தனுலாச்சூடிய விக்கிரசோழனும், கூத்தன் உலாமாலையோடு பிள்ளைத் தமிழ் மாலை பெற்ற சோழனும், கூத்தன் உலாக் கண்ணிதோறும் போன் னுயிரஞ்சோரிந்த பூபதியும் எனமூவர் கூறப்படுத லுடன், ஒட்டக்கூத்தர் மூன்றுலாப் பாடினரென்ப துங் கூறப்பட்டது. இனிப் பரணிகொண்ட விற லோன், அபயனுகிய உபய குலோத்தமன் என்பது பலருமறிவர். அவ்வபயன் மகன் விக்கிரமசோழன்

என்பது ஒட்டக்கூத்தர் 'சீர்தந்த தாமரையாள் கேள்வன்' என எடுத்த விக்கிரமசோழனுலாவின்கண்,

" ... ... ... கூடல்
சங்கமத்துக் கொள்ளுந் தனிப்பணிரக் கென்னிறந்த
துங்கமத யானை துணித்தோனு—மங்கவன்பின்
காவல் புரிந்தவனி காத்தோனு மென்றிவர்கள்
பூவலயமுற்றும் புரந்ததற்பின்—மேவலர்தஞ்
சேலைத் துரத்தி சிலையைத் தடிந்தருகாற்
சாலைக்களமறுத்த தண்டினுன்—மேலைக்
கடல்கொண்டு கொங்கணமுங் கன்னடமுங் கைக்கொ
டடல்கொண்ட மாராட் டரசை—யுடலை
யிறக்கி வடவரையே யெல்லையாய்த் தொல்லை
மறக்கலியுஞ் சுங்கமு மாற்றி—யறத்திகிரி
வாரித் திகிரி வலமாக வந்தளிக்கு
மாரித் பொலிதோ ளபயற்குப் பார்விளங்கத்
தோன்றிகோன் விக்கிரமசோழன்"

எனக் கூறியதினுனும், பழைய சாதனங்களானும் நன்கறியலாகும். இவ்விக்கிரமசோழன் மகன் குலோத்துங்கன் என்னும் பெயரே பூண்டவன் என்பதும், அக் குலோத்துங்கன் மகன் இராஜராஜ னென்னும் பெயரினுன் என்பதும், புராதன சாதன ஆராய்ச்சியுடையார் பலரும் அறிந்தனவேயாம். சங்கர சோழனுலாவால் கூத்தரால் உலாப்பாடப்பட்டோர் விக்கிரமசோழனும், அவன்பின் அரசாண்ட சோழிருவருமே என்பது நன்கு தெளியப்பட்டது, விக்கிரம சோழன் தந்தையாகிய அபயன் "சயங்கொண்டார் பாடிய பரணி கொண்டான் என்பது தெரிவதன்றி அவ்வபயன் கூத்தர்பாடல் கொண்டான் என்பதோன்

றும் அச்சங்கரசோழ னுலாவால் தெரிவதற்காவதில்லை. ஆதலாற் சங்கரசோழனுலாவிற் கூறியதற்கேற்பக் கொள்ளுமிடத்து விக்கிரம சோழனும், அவன் மகன் குலோத்துங்க சோழனும், அவன் மகன் இராஜராஜச் சோழனுமே கூத்தர்பாடல் கொண்டனராவர், எனவுணர்க. அபயனும் கூத்தர்பாடல் கொண்டவனுயின் இக்கூத்தர் நான்கரசர் காலத்திருந்தாரெனப்பட்டு இவரதாயுட்காலம் வரம்பின்றியோடுமென்க. சங்கரசோழனுலாவால் கூத்தர் விக்கிரமசோழன் மகனுகிய குலோத்துங்கனைப் பாடியுள்ளார் என்பதறியப்படுதலால், இக்கூத்தர் பாடலுற்குறித்த குலோத்துங்கன் என்னும் பெயரும் அவ்விக்கிரம சோழன்மகன் குலோத்துங்கனையே குறிப்பதாமென்பது எளிதிற் கொள்ளததகும், அவன், உலாவன்றி பிள்ளைத் தமிழ்மாலையும் கூத்தர் பால்பெற்ருனென்பது தெளியப்படுதலால், அவனிளம்பிராயந்தொட்டுக் கூத்தர் அவன்பாற் சிறப்புற்றிருந்தனரென்ப தூகிக்கப்படும்.

இனிப், "பாடுங் கவிப்பெருமா னொட்டக்கூத்தன் பதாம்புயத்தைச் சூடுங் குலோத்துங்க சோழனென்றேயெனைச் சொல்லுவரே" என்று பாடிய சோழனும் அக்குமார குலோத்துங்கனே யாவன், கூத்தர் தன் தந்தைக்கு உறுதுணையாய் விளங்கிய சிறப்புப் பற்றியும், தான் அவர்பால் கல்வி பயின்றமைபற்றியும் இனையனை அச்சோழன் அக்கூத்தரைப் பராஅய்ப் பாடினனுவன்.

விக்கிரமசோழன் அரசுபுரிகின்ற காலத்தேதான் கூத்தர் வரகவியாய்ப் போந்தனரென்பது புலனும்,

அவ்விக்கிரமன் பின் இரண்டு தலைமுறை யரசரைப் பாடினர் என்பதனால், இப்புலவர்க்குக் கவிதை யுண்டாகிய காலம் விக்கிரமசோழனுடைய பிற்காலமேயாம்; அஃதே இக்கூத்தரது இளமைக்கால மாமென்பது உய்த்துணரலாகும்.

விக்கிரமன் கி. பி. ஆண்டு 1118-முதல் 1132-வரைக்கும், குலோத்துங்கன் கி. பி. 1132-முதல், 1162 வரைக்கும் இராஜராஜன் கி. பி. 1162-முதல் 1200-க்கு மேற் சிலவாண்டுகள் வரைக்கும் அரசாண்டார்களெனக் கூறுவர். நமது கூத்தர் கி பி. 1118-க்கும், கி. பி. 1200-க்கும் இடைப்பட்டகாலத்தே பெயர்சிறந்தவரென்று கொள்ளலாகும். விக்கிரமன் அரசாட்சிக்காலம் 14 ஆண்டேயாகக், கூத்தர் அக்காலத்தே புலமை நிரம்பினராகி அவனை உலாவாற்பாடின ரென்பதனால், அவர் விக்கிரமன் ஆட்சியெய்துதற்கு முன்னே பிறந்ராதல் தெள்ளிதாம். கூத்தர், விக்கிரமன் முதலாக மூன்று தலைமுறை யரசர் காலத்தவராதலால் அவர் விக்கிரமன் அரசாட்சியி னிறுதிக்காலத்தேதான் புலமைநிரம்பினராகி, அவனை உலவாற்பாடினராவர் எனக் கூறுதலாகும். விக்கிரமனாட்சி 1132-க்கு மேற்படாமையால், கூத்தர் உலாப்பாடிய அவனாட்சியின் இறுதிக்காலம் 1130-க்கும் பிற்பட்டிருத்தல் பொருந்தாதாம். கூத்தர் விக்கிரமனை உலாப் பாடும்போது அவருக்கு வயது இருபதிற் குறைந்திராதெனவைத்துக்கொள்ளலாகும். விக்கிரமசோழன் கூத்தருக்கு முதன்முதல் பரிசில் பல நல்கிச் சிறப்புச்செய்தபோது அவர், 'இடுக்கட் புன்படு நிரப்புக்கொண் டுழன்றிரக்கச் சென்ற

வின் றெனக்குச் சிங்களந் திடுக்குற் றஞ்சுப்வெஞ் சினத்துச் செம்பியன்றிருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன" என்பதனால் தம் வறுமைப்பட்ட நிலையை எடுத்துரைத்தலின், அக்காலம் குடும்பவருத்தம் நெஞ்சிற்மே ற்றி அதனைத்தீர்த்தற்கு இவர் உழன்றதோர், பெரும்பிராய காலமாகுமென்றும் ஊகித்தல்கூடும். தமிழ்நாவலர் சரிதைக்கண், 'நடித்தது நச்சரவு" என்னுஞ் செய்யுட்டலைப்பில் "சரசுவதி தம்பலங் கொடுக்கக் கவிதையுண்டாகிய கூத்தமுதலியார் அரும்பைத் தொள்ளாயிரம் பாடும்போது விக்கிரமசோழன் கேட்டு ஒருகவியை ஒட்டச்சொல்லென்று சொன்னபோது பாடியது எனவமைந்திருத்தலால், கூத்தருக்கு கவிதையுண்டாகிய காலம் விக்கிரமசோழன் ஆட்சிகாலமேமே யென்பது அறியப்படும். கூத்தர் குலோத்துங்கன் ஆட்சிக்காலமாகிய முப்பதாண்டையும் கடந்து இராஜராஜனது நீண்ட அரசாட்சிக்காலத்தின் முற்பகுதியின் பெரும்பாகத்தும் இருந்தாராவரென்று அறியப்படுதலால், அவர் விக்கிரமன் காலத்திற் கவிதையுண்டானவராகி, அவனை உலாவாற், பாடியபோது அதிக வயதாயினராகக் கொள்ளுதற்கும் இயையாதாம், இவற்றால் கூத்தர் விக்கிரமனு லாப்பாடியபோது இருபது பிராயத்தினரெனவும் அது விக்கிரமன் இறுதி ஆட்சிக்காலமாகிய கி.பி 1130-க்கு அடுத்ததாமெனவும் கொள்ளின், கூத்தர்பிறந்த காலம் கி. பி. 1110 எனக் கூறலாம்.

சடைய வள்ளலுடைய தந்தையாகிய சங்கரனுக்கு உதவித் தொழில்புரிந்துகொண்டிருந்த கூத்தர்

கி. பி. 1110-ம் ஆண்டினை அடுத்துப் பிறந்தவராகுஞ் கூத்தரை அத்தொழிற்கு அமைத்துக்கொண்ட சங்கரன் கூத்தரின் மிக மூத்தோனுவனென்று ஊகித்தலாகும். கூத்தர் சங்கரனுக்கு உதவித் தொழில்புரிந்தது அவருக்குக் கவிதையுண்டாவதற்கு முன்னேயாம். அக்காலம் கூத்தருடைய இளமைக்காலமாகத் துணியப்படும். கூத்தருடைய இளமைக்காலத்தே அவரை உதவித்தொழிற்கு அமைத்துக்கொண்ட சங்கரன், அவர்புலமை யெய்தி விக்கிரமனைப்பாடியபோது இல்லையாயினன் என்பதனால், அச்சங்கரன் இறந்தகாலம் கூத்தருடைய 16 பிராயத்திற்கும் 20 பிராயத்திற்கும் இடைப்பட்ட தாகுமென்று உய்த்துணரலாகும். கூத்தர்பிறந்த காலம் கி. பி, 1110 எனக் கொள்ளப்படுதலாற் சங்கர னிறந்தகாலம் கி. பி. 1127-ஆம் ஆண்டினை அடுத்ததாகுமென்று ஊகிக்கப்படும், இதுவே விக்கிரமனது இடையாட்சிக் காலமென்ப துணர்ந்து கொள்க. விக்கிரமன் 1118-முதல் 1132 வரை ஆக 14 ஆண்டும், குலோத்துங்கன், கி. பி. 1132-முதல் 1162 வரை ஆக 25 ஆண்டும், இராஜராஜன் கி. பி. 1162 முதல் 1200 மேற் சில 40 அல்லது 42 ஆண்டுகள் வரையும், இம்மூன்று அரசர்களும் செங்கோலோச்சிப் பெருமையுற்றதும், புலவர்கள் புலமைநிரம்பிப் புகழ்பெற்றதுமாம். எஞ்சிய இராஜராஜன் அரசாட்சியில் 1200-க்கு மேற் சோழருடைய பேரரசாட்சி சிதைந்தது எனவும், பின் சிற்சில சிற்றரசர்களால் நாடு ஆளப்பட்டபோது ஓரங்கல் வேந்தர் படையெடுத்துச் சோணாட்டைக் கைப்பற்றிக்கொண்டு அதனை 14-ஆம் நூற்றாண்டுவரை ஆண்டனரெனவும் புராதன சாசன

ஆராய்ச்சியாற்றெரிகிறது. (Sewells List of Antigvities, Madras Vol. II P. P. 159.)

இஃதன்றிக் கூத்தர் வாழ்ந்த கால நிர்ணயத்திற்கு மற்றோர் சாஸனரூபமான பிரமாணமொன்றும் இதன் கீழ்த் தருகின்றோம்.

"இன்றைக்குச் சுமார் ஆயிர வருடங்களுக்கு முன் முதல் ஆண்ட பல்லவ சோழ வம்சத்தினர்களில் அதிக பேர் பெற்றவனாய் இராஜ இராஜ சோழனைத் தவிர்த்து அநேக சிவாலயங்களும், பொது ஜனங்களுக்கு உபயோகமான அநேக காரியங்களும் செய்தவன் விக்கிரமசோழனென்பான். இச் சோழ அரசனது காலம்சகம் 1034 முதல் 1049 வரையில்; அதாவது கி,பி. 1112 முதல் 1127 வரையிலாகும். இவ்வரசனது காலவரையை நிச்சயமாகச் சொல்ல இவ்வரசனது ஆக்ஞையின்படி தஞ்சாவூர் ஜில்லா நாகப்பட்டினம் தாலூகா திருவாரூர் ஸ்ரீ தியாகராஜப் பெருமானுக்கு விட்ட சர்வ மானியங்களைப் பற்றி அக்கோயில் கல்வெட்டு சாஸனமொன்றில் * 'கோப்பரகேசரிவர்மரான திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரமசோழ தேவர்க்குயாண்டு ஐந்தாவது † மிதுன ஞாயிறு பூர்வபக்ஷத்து சப்தமியும், ஞாயிற்றுக் கிழமையும் அத்தமுமான நாள் முந்நூற்றுப் பதினாறு" என்று எழுதிக்கொண்டே போகின்றனர். புணவிலு

---

* சாசனங்கள் தமிழும் சம்ஸ்கிருதமும் கலந்தபடியால் நேயர்களுக்குச் சௌகரியமாகத் தமிழிலேயே எழுதப்பட்டிருக்கின்றது.

† மிதுனஞாயிறு ஆனிமாதம்.

ள்ள மிஸ்டர் ரீசுஷித் என்பவர் இந்த திதிகளை வைத்துக்கொண்டு கணிதம் பண்ணியபோது "விக்கிரம சோழன் கி. பி. 1112-ல் அரசாள ஆரம்பித்ததாகக் கொண்டு பார்க்கின் அவரது ஐந்தாவது ஆண்டு 1116-ல். விழும். 1115, 1116, 1117-ம் வருஷங்களுக்கு கணிதம் செய்து பார்த்தபோது 1116-ம் வருஷமொன்றே மேலே கொடுத்த விவரங்களுக்கு ஒத்துவருகிறது. அந்த வருஷத்தில் ஆஷாட சுக்கில சப்தமி ஜூன்மாதம் 18-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை இரவு 37—30, நாழிக்கு முடிவாகிறது. அல்லது ஆனி மாதம் 25-ந்தேதியாகும். சௌர சாந்திரமானபடி அன்று காலை 7-மணி 45 நிமிஷம்வரையில் உத்திரமிருந்து அதற்குமேல் அஸ்தம் உதயமாகியிருக்கிறது. என்றெழுதி யிருக்கின்றார். மேலே எழுதியது நிச்சயமாயின் கி. பி. 1111 ஜூலைமாதம் 15-ந்தேதி சனிக்கிழமை இவர் சிம்மாசனம் ஏறியிருக்க வேண்டுமெனப் "புரோபசர் கீல் ஹார்ன்" எபிகிராபிகா இண்டிகா IV வால்யத்தில் சொல்லுகிறார். இவர் இதற்கு முன் யுவராஜாவாக விருக்கும்போது கோதாவரி முதலிய ஜில்லாக்கள் கூடிய வேங்கை மண்டலத்தையாண்ட வீமராஜனை ஜெயித்து அதைத்தாமே சோழ சிம்மாசனம் வரையில் அரசாண்டதாகப் பின்வரும் பிட்டாபுரத்திலுள்ள ஸ்தம்பத்தில் வெட்டப்பட்டிருக்கும் சாதனம் கூறுகிறது:—

'தமஸிமஸ்தியா கசமுத்திராபரநாம நிசோடமண்டலம், திரானும் கதவதி (வெங்கிபூமி நிர்யகாஹிதா ததந்திரே ஜாதா"!!

தியாக சமுத்திரனெனும் வேறு பெயரை யுடைய விக்கிரமசோழன் சோழ மண்டலத்தைப் பரிபாலனஞ் செய்யச் சென்றபோது வெங்கிநாடு அதிதியின்றி யிருந்தது என்பதாம்.

இப்பெயர் இவனுக்குண்டென்பது ஒட்டக்கூத்தர் தாம் பாடிய விக்கிரம சோழனுலாவில்,

கன்னியு நன்மதையும் கங்கையுஞ் சிந்துவும்
பொன்னியுந் தோயப்புகார் விளங்க—மன்னிய
செங்கோற் றியாகசமுத்திர நண்ணுதலும், என்றும்,
........................ போர்த்தொழிலா
லேனைக் கலிங்கங்க ளேழணையும் போய்க்கொண்ட
தானைத்தியாக சமுத்திரமே.''

என்று சொல்வதால் போதரும். இதுவன்றி இவ்வரசனுக்கு அரசனபயம், அகளங்கன், குமரித்துறைவன் முதலிய பெயர்களிருந்தனவென்றும் அறியக் கிடக்கின்றது.

இவர் ஜயித்ததாகக்கூறும் சில சாசனமொன்று கீழே வரைகின்றேம்.

''பூமாலை மிடைந்து பொன்மாலை நிகழ்தரப்
பாமாலைமலிந்த பருமணித் திரள்புயந்
திருநிலை மடந்தையொடு ஜயமகளிருப்பத்
தன்றணை மார்பன் றனதெனப் பெற்றுத்
திருமகள் ஒருதனியிருப்பக்
கலைமகள் சொற்றிறம்புணர்ந்த சர்பினளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத்
திசைதொறும் திகிரியோடும் செங்கோல் நடப்ப
அகிலபுவனமும் களிப்பதொரு புதுமதிபோல்

வெண்குடை மீமிசை நிற்பக்
கருங்கலி ஒளித்துவண் பிலத்திடைகிடப்பக்
குளத்தெலிங்க வீமன் விலங்கல் மிசையேறவுங்
கலிங்க பூமியைக் கனையெரி பருகவும்
ஐம்படைப்பருவத்து,................படைதாங்கி
வேங்கை மண்டலத் தாங்கினிதிருந்து
வடதிசை வாகை சூடித்
தென்றிசைத் தேமருகமலப்பூமகள் பொதுமையும்
பொன்னியாடையாய் நன்னிலப்பாவையும்
தனிமையுந்தவுந்து
புனிதத்திரு மணிமகுட முறைமையிற்சூடி
தண்ணளிபரப்பித் தனித்தனி பரக்து
மண்முழுதுங் களிப்பமணிநாவொடுங்க
விசையமும் புகழுமேல் மேலோங்கச்
செழியர்வெஞ்சுரம்புக சேரலர் கடல்புக
அழிதருசிங்களரஞ்சி நெஞ்சலமாக
கங்கர்துரையிட கன்னடர் வென்னிட
கொங்கர் ஒதுங்க கொங்கணர்சாய
மற்றெத்திசை மன்னரும் தத்தமக்காணைத்
திருமலர் சேவடி உரிமையில் நிற்றஞ்சத்
தொல்லை எழுலகுந் தொழுதெழத் தோன்றிய......
கோபரகேசரி பரமரான திரிபுவன சக்கரவர்த்திகள்
ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்."

இவைகளைத் தவிர்த்து இச்சோழன்பேரால் தஞ்சாவூர் ஜில்லா மாயவரம் தாலூகாவில் திருவலங்காட்டுக்கு எதிரில் காவேரியில் பிறிகின்ற ஆற்றுக்கு "விக்கிரமனாறு" என்றும் மேற்படி தாலூகா குற்றாலத்தில் மாயவரம் செல்லும் சாலையோரமாயிருக்கும் கோயிலுக்கு "விக்கிரம சோளீச்சுர" மென்றும் அதற்கடுத்த கோயிலுக்கு "ஓங்காரேசுரமேன்றும்"

இதற்கு இறையிலியாக (சர்வமானியமாக) விட்ட நிலங்களுக்கு "விக்கிரமன் குற்றாலமென்றும்" வழங்கப் படுகிறது. விக்கிரமனாறு வடகரையிலுள்ள திருமங் கலமென்னும் கிராமத்திலிருக்கும் சிவன்கோயிலின் வடபுறம் வெட்டப்பட்டிருக்கும் சாசனங்களால் இக் கோயிலும் இவனால் கட்டப்பட்டதென்று தெரிகிறது. குற்றாலத்திலுள்ள ஓங்காரேசுராராயலம், விக்கிரம சோளீச்சுரம் இவைகளில் அவ்வரசனது சாசனங் கள் பல நிறைந்திருப்பது சாதன பரிசோதனர்க்கே யன்றி மற்றையரும் எளிதிலுணரும்படி அவ்வளவு சுத்தமாக விருக்கின்றது. சுபம்.

ஒட்டக்கூத்தர் சரித்திரம்.

முற்றிற்று.



# அநுபந்தம்.

மற்றும், இப்புலவர் பாடியதாகத் தமிழ் நாவலர் சரிதையில் காணப்படும் சில பாடல்கள் வருமாறு :—

ஒட்டக்கூத்தர் உலாப்பாடியபோது பேராசிரியர், நேமிநாதர் பட்டோலை பிடிக்கப்பாடியது.

செங்கான்மட வன்னம்படர் நீயாமென வெருவிச்
  சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரள் கமுகின்
பைங்கான் மரகதமீது படர்த்தேறி நறுந்தண்
  பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி நாடா
தங்காதலி யருமைத்தரு முடனாக வணங்கித்
  தலைகாவெம துடல்காவெம துயிர்காவக ளங்கா
கொங்காமன துங்காவென மதுரேசர் வணங்குங்
  கொல்யானை யபங்காவிவள் குழலோசை பொருளே.

இவ்விருதுகள் யாருக்கேன்றபோது கூத்தர் பாடியது

பத்துக்கொண் டனதிக்கும் பதரிப்போய் முடியப்
  பைப்பொற்று ரகைசிந்தப் பகிரண்டத்திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
  வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானு பரனு
முத்துப்பக் தரிகிற்கும் குருளைக்குஞ் சினவேண்
  முருகற்கும் பொழியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்கொந் தளருக்கு மல்லாற்
  கூழைத்தண் டமிழற்கேன் கொடியுங்காளமுமே.

கண்டன் துலாபுருடதானம் பண்ணியபோது
கூத்தர் பாடியது.

தொழுகின்ற மன்னர் சொரிந்திட்ட செம்பொற்றுலாத் திடைவண்,' டொழுகின்ற தார்க்கண்ட னேறிய ஞாற்றி னு

வாமதிபோய், விழுகின்ற தொக்கு மொருதட்டுக் காலையில் வேலையில்வத், தெழுகின்ற ஞாயிறொத் தான்குல தீப னெதிர்த்தட்டிலே.

### கண்டன் செண்டுவெளிற் குதிரை யேறியபோது கூத்தர் பாடியது.

கண்டன் பவனிக் கவனப் பரிநெருக்கான்
மண்டுளங்கா தேயிருந்த வாறென்னோ—கொண்டிருந்த
பாம்புரவி தாயல்ல பாருரவி தாயல்ல
வாம்புரவி தாயவகை.

### ஆனை நிகளம் விடுத்தபோது கூத்தர் பாடியது.

இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச் சீறியோ—சென்னி
யசளங்கா வுன்ற னயிராவதத்தி
னிகளங்கால் விட்ட நினைவு,

### இராசா கைகொடுத்தபோது கூத்தர் பாடியது.

கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத் தடவிய கையே யிதுசக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்தவொன்னார்
தலையைத் தடவி நடக்குங்கோல் யானைச் சயதுங்கனே.

### மடையனைத் தண்டஞ்செய்ததை விலக்கக் கூத்தர் பாடியது,

மீனகம் பற்றிய வேலையு மண்ணையும் வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலல்லை யோபொருக் தாவரசர்
கானகம் பற்றக் கனவரை பற்றக் கலன்கள்பற்ற
வானகம் பற்ற வடிவேல் விடுத்த மனதுங்கனே.

அரிலையப்பாட வேண்டுமென்னக் கூத்தர்பாடியது.

ஆரே யெனுமொன்று சொல்லத் தொடங்கினு மவ்விடத்துன்
பேரே வருமென்ன பேறுபெற் றேன்பெரு நான்மறையின்
வேரே மிதிலையின் மின்னுட னேவெய்ய கானடந்த
காரே கடல்கொளுந் தச்சிலை வாங்கிய காகுத்தனே.

கூத்தர் மாணாக்கன் பாடிய அந்தாதி சமுத்தி.

மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின தண்டலைக்
காவுறங்கின வின்னமென்மகள் கண்ணுறங்கிலள் கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக்குல தீபவள்ளை குதட்டகின்
ரூவுறங்கு புகாரசஞ்சல வஞ்சவென்ன வடுக்குமே.

அன்றியும், இவர் செய்த நூல்கள். இராமாயணம் உத்தரகாண்டம், ஈட்டியெழுபது, அண்டத்துப்பரணி, தக்கயாகப்பரணி அரும்பைத் தொள்ளாயிரம், நாலாயிரக் கோவை, விக்கிரமசோழன் உலா, பிள்ளைத்தமிழ், மாலை, கோவை முதலியன. சுபம்.



தமிழபிமானிகள் ஒருகாலும் கூறார் என்பது சத்தியம். சாதி, குலம், மதம் முதலிய தொடக்குண்டு கிடக்குநர் இத்தகைய ஆராய்ச்சிகட்கு ஒரு சிறிதுந் தக்கவர் அல்லர். அத்தகையினர் தமிழின்கண் அபிமானம் சிறிதும் இல்லாதவருமாவர் என்க.

தமிழபிமானம் உண்மையின் உளதேல் எத்தகையினரேனும், எக்குலத்தினரேனும், எச்சமயத்தினரேனும் அன்புசெலுத்தல் வேண்டுமன்றே. அவ்வாறு இவர் அன்பு செய்யக் காணுமையின் இவர் அபிமானம் உடையேம் என்று கூறுங் கூற்றனைத்தும் வெறும் போலியாதல் காண்க. இனி, ஒன்றன்பால் விருப்பும் பிறிதொன்றன்பால் வெறுப்புமுடைய இங்ஙீரர்க்கு உண்மை எங்ஙனம் புலப்படும் என்க.

இப்பெற்றி வாய்ந்த போலிமாக்களினுலேயே நந்தம் தமிழ்ப் புலவர் வரலாறும் ஏனையவும் ஒரு தலைப்படாமற் கிடக்கின்றன. அந்தோ! அந்தோ! நாகரிகம் ஓங்கிப் பொலிவுறும் இக்காலத்தும், அங்கில மக்களின் ஆராய்ச்சித் திறன் முதலியவற்றைக் கண்கூடாகக் கண்டுகளித்தும் இத்தன்மையை பொய்வரலாற்றில் பற்றுதல் வைத்துழலும் அறிவோர் செய்கையை என்னென்பேம்! தமிழ்மகளே! ஈதுன் போகூழ் வலியோ!

இனி, அன்னூர் கூறியவற்றுள் ஐயந்திரிபுடையவற்றினையும், அபிமானம் பற்றியவற்றினையும், எடுத்துரைப்பின் அஃதோர் நூலாய் விரியுமாகலின், அவையிற்றுள் தாலிபுலாக நாயம்பற்றி ஒன்றனைக்கூறி நிறு

த்துவேம். உதாரணமாக, கம்பரைச் சைவரென்றனர் சிலர். சிலர் வைணவரேன்றே கூறினர். கம்பர் குலத்தில் வன்னியர் என்றும், ஓச்சர் என்றும் அரசர் என்றும் பலரும் பலபட உரைத்தனர். இவற்றுள் எதனைக்கொள்வது எதனைத்தள்ளுவது? ஒருவரும் பிரபல ஆதாரங் காட்டினுரல்லர். அவர் கூறியனயாவும் கெதானுகெதிகயோயம் பற்றியனவே யன்றி வேறன்று.

இனி, இவ்வுரைப்பிறல்களின் தன்மையை இம்மட்டில் நிறுத்தி, இப்போது தமிழ்ப்புலவர் வரலாறு. என்னும் தலைக்குறி புனைந்து வெளிப்போந்துலவும் புலவர் வரலாற்றின் தன்மை பற்றிச் சில கூறிப் பாயிரத்தை முடித்தும்.

இதனை எமதுபார்வைக்கு இதன் ஆக்கியோனுகிய நண்பர். ஸ்ரீமாந் சி. கு. நாராயணசாமி முதலியார் அவர்கள் அனுப்பினர். அதனைப் படித்தேற்குப்பெரிதும் இன்பம் பயந்தது. அதன்கண் ஒருபாலதாய இரட்டைப்புலவர் சரிதத்தைப் படித்துப் பார்த்ததில் அவருடைய ஆராய்ச்சித்திறன் இத்துணைப் பாராட்டற்பாலதென்பது விளங்கிற்று. அவற்றுள் சில ஈண்டு கூறுகின்றோம்.

தமிழ் நாவலர் சரிதை, சோழமண்டல சதகம் போன்ற பழைமையான நூல்களைக் கருவியாகக் கொண்டு நண்பர் அவர்கள் வரைந்துள்ளார்கள். அவற்றுள் பல இன்றுவரை வெளிவா ராதன. ஒரு விஷயமனும் பிரமாண மின்றி எழுதப்படவில்லை. இது

காறும் வெளிவந்த வரலாற்றின்கண் காணப்படும் குற்றங்களையும் ஆங்காங்கெடுத்துக் கூறி மறுக்கின்றார். பெயர்களுக்குக் காரணமும் ஆண்டாண்டு தெரித்துரைக்கப் பட்டுள்ளது. ஊர்கள் இருக்குமிடத்தையும் குறிக்கப் பட்டிருக்கின்றது.

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கர் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்-செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்."

என்னும் பாட்டுக் கிலக்காகத் தமிழுலகம் உண்மை உணர்ந்துறுதி தலைக்கூடி யுய்யும்பொருட்டு உள்ளதுள்ளவாறே கிளக்கவேண்டி இவர் எடுத்துக்கொண்ட உழைப்பு, ஆராய்ச்சி முதலியவை எம்மாலும், தமிழ் மக்கள் அனைவராலும் போற்றன் மாலையவாம் என்க.

இதுகாறும் வெளிவந்துள்ள பன்னூல்களினும் இதுவே தலைச் சிறந்த தென்பது எமது கருத்து. அதனையே உலகம் அறிந்து கூறும் என்க. சில இடங்களில் இவர் அறிவின் நுட்பத்தால் நுனித்துக் கூறும் பொருண்மை இறப்பவும் மதித்தற்பாற்று. முதற் கொண்டு முடிவுகாறும் ஒரே தன்மையாய் சொன்னோக்கம், பொருணோக்கம் துறுமி ஒளிர்கின்றது. காலத்தை வரையறுத்துக் கரதலாமலகம்போல் காட்டுகின்றது. நடையும் ஆற்றொழுக்குப்போல் மொழுமொழு வென்று நவின்றோர்க்கினிமை பயக்கும் நன்மொழி புணர்ந்து ஓசைபெற்று இனிது நடக்கின்றது. நிற்க.

இந்நூலானது தமிழ்ப்புலவர் காலம் முதலியவற்

றை உணர்வதற்கு ஒரு நந்தாமணி விளக்காய்ச் சிறக்கின்றது என்பது, நட்டார், பகைவர், நொதுமலர் என்னும் முத்திறவாரானும் ஒத்துக் கோடற்பாற் றென்க.

இனி, இந்நூலைப்போலப் பன்னூல்கள் தமிழின்கண் வெளிவருதல் வேண்டுமென்றும், இந்நூல் நின்று நிலவவேண்டும் என்றும், இந்நூல் முட்டின்றி முடிந்தமை நோக்கியும், எல்லாம்வல்ல முழுமுதற் செழும்பொருளும், "ஆதியிற்றமிழ் நூலகத்தியற் குணர்த்திய மாதொருபாகனுமாகிய சிவபெருமானை" மனமொழி மெய்களான் வணங்குதும். சுபம்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்—அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு." (வள்ளுவனார்)

'கல்யாண நிலயம்'
8, வெங்கடராமையர் வீதி,
சென்னை, கி.

இங்ஙனம்,
தாழ்மையுள்ள,
மணி. திருநாவுக்கரசன்.